வடாதுவெற்பெனவயங்கியவன்கதையெடுத்துக்
கெடாதசீற்றமோடுகைத்தனன்கெடுந்தொழிலவுணன்
றடாதுமார்பகங்காட்டினன்சமர்மிகுகுரூரன்
விடாதுதாக்கிவிண்டதுசிலைவீசமாம்பியைப்போல். (௫௮௨)

மூசலமொன்றனையோச்சினன்மூர்க்கனுமவுணன்
னசலமன்னதன்றோளுறவதுதனைப்பற்றிக்
குசலநெஞ்சினன்விடுத்தனன்கொழுநனைச்சேர்ந்தோர்
பசலையென்னவேயுடைந்ததுபாதகனிரதம். (௫௮௩)

கோலமல்கியவேறொருதேரினைக்கூட்டிச்
சூலமொன்றினைத்தூண்டினன்றுட்டர்களிறையவன்
சீலமிக்கவன்செங்கையின்விரலினாற்றெறித்தான்
ஞாலம்விண்டதுநடந்ததுபாதலநோக்கி. (௫௮௪)

வடித்தசக்கரமொன்றனைவிடுத்தனன்மானம்
பிடித்ததானவர்கோமகன்பிறங்கியவதனை
முடித்ததும்பையின்மிக்கவன்முன்கரநீட்டிப்
படித்தலத்திடைவிழாவகைபரித்தனன்தொடிபோல். (௫௮௫)

இனிச்சிறந்ததொன்றில்லெனவெரியுமிழ்ந்திலகுந்
தனிச்செழும்பெருமழுவினைத்தானவன்விடுத்தான்
பனிச்சுதைக்கலைமதிபுனைபரமனார்மருமா
னனிச்சமென்மலரெனவதையங்கையாற்குழைத்தான். (௫௮௬)

விட்டபல்வகைப்படைகளும்விளங்கியகுரூர
னட்டெகிற்றலும்பொருதவனழன்றுதேர்கடவி
மூட்டியங்கையின்வாளினாலெறிந்தனன்மொய்ம்பிற்
பட்டுவிண்டிருதுணியெனப்பாரில்வீழ்ந்ததுவே. (௫௮௭)

மீளுமுன்னர்க்குரூரன்வெய்யவன்மணித்தேரைத்
தாளினெற்றினனதுசதங்காவதமுருண்டு
தூளிபட்டதுநராந்தகன்றுனைந்துமண்குதித்துக்
கோளின்முட்டியகூவிரச்சகடம்வேறிவர்ந்தான். (௫௮௮)

சீற்றமேம்படுமிவன்வலிதேவர்கள்படையாற்
காற்றுவேனெனக்கனன்றுதானவன்கடற்கிறைவ
னாற்றன்மாப்படைதொட்டனனங்கையிற்குரூர
னேற்றுவாய்மடுத்துண்டனனிரும்புனல்போல. (௫௮௯)

வணங்கிமாருதப்படையினைத்தொடுத்தனன்மாற்றா
னணங்குகாற்றுருவாயதுநேர்ந்தமருடற்றக்
கணங்கள்போற்றிடுங்குரூரன்கைத்தலத்திடையேந்தி
புணங்கவாயிலிட்டுண்டனனுரகமேபோல. (௫௯௦)

சீறுநாகபாசந்தினகரன்படைசெந்தே
னூறுதாமரையான்படைநாரணன்படையும்
வேறுவேறுதூண்டினனவுணர்களிறைவிண்ணோன்
மாறுதூண்டிலனவற்றையும்வாங்கிவாய்மடுத்தான். (௫௯௧)

தடையினின்றிடாப்பாசுபதாத்திரந்தன்னை
யடைவின்வந்தனைசெய்துகையெடுத்தனனவுணன்
றொடைசெய்முன்னவன்றேரினைத்துண்ணெனவடுத்துக்
கொடைமிகுக்கரத்தெடுத்துவிண்ணெறிந்தனன்குரூரன். (௫௯௨)

விண்ணெழுந்துசெனராந்தகனிரதமீளாமுன்
மண்ணிருந்தமன்னவனைமன்னவன்றனையர்களை
யெண்ணமைச்சரைவருகவென்றினிதுகொண்டேகி
யண்ணல்சந்நிதிவிடுத்தடிவணங்கினனறவோன். (௫௯௩)

வேந்தனுதியர்தாங்களும்வியன்பதம்பணிந்தார்
சார்ந்துபோற்றியகுரூரனுதியர்தமக்கெல்லா
மார்ந்தபேரருள்வழங்கியக்கமலனூரடுபோர்
நேர்ந்ததானவர்தலைவனைநெருக்கவேநின்றார். (௫௯௪)

அந்தரத்தெழுமிரதமேழுலகமுமளந்து
வந்துமண்ணிடைமறிந்துநுண்டுகளெனமாய்ந்த
தெந்திரப்பொலந்தேரொடுமிருநிலம்விழுந்த
சுந்தரப்பொலம்பூணினன்சோகமுற்றெழுந்தான். (௫௯௫)

உருவினாற்பருவத்தினாலுறுவரன்மகனார்
பெருமையெண்ணிலஞ்சிறுவனென்றேபெரிதிகழ்ந்தா
மொருவனின்றனனொளிமுகத்துயிர்த்தனன்பலரை
மருவுமன்னவர்தம்முனோர்வயவன்வந்தெதிர்த்தான். (௫௯௬)

எதிர்த்தவீரனும்படைக்கலந்தொட்டிலனிகலி
யதிர்த்தலாதியிற்சேனைகளழித்தனன்மலையும்
பொதிர்த்துநீளுமென்கைப்படைபோக்கியத்திரமு
முதிர்த்தகட்டிபோலுண்டெனதாற்றலுமுலைத்தான். (௫௯௭)

தமியனாகியமைந்தனேயிதுசெயிற்றலைவ
னெமியனாயமரேற்றிடினென்படாசம்யாமே
யமிழ்தர்யாவருமஞ்சமாயையினமராற்றித்
துமிசெய்வாமினிச்சிறுனையென்றவுணர்கோன்றணித்தான். (௫௯௮)

கருவிமேகமாய்க்கதனுறைசிதறினன்றீயோன்
பெருகுகாலுருவாயதைப்பெயர்த்தனன்பெருமான்
வெருவுதீயுருவாயமர்விளைத்தனன்வெய்யோ
னுருவநீர்வடிவாயதையொழித்தனனுரவோன். (௫௯௯)

மடங்கலாயினனராந்தகனதுதனைவள்ளன்
முடங்குவாலெயிற்றிருஞ்சிறைச்சரபமாய்முடித்தா
னிடங்கொள்வையகத்தின்னணந்தீயவன்பின்னுந்
தொடங்குமாயைகளனைத்தையுந்தொலைத்தனர்சுமுகர். (௬௦௦)

எடுத்தவன்பெருமாயையுமெம்பிரானதுவே
தொடுத்தறுத்தலுநராந்தகன்றணிந்தனனிவனைப்
படுத்துவெல்லுதல்படாதுமூத்தவனிருத்தலினால்
விடுத்திரும்பகைகலத்தலுமேவுறுநமக்கே. (௬௦௧)

பட்டகாரியமனைத்தையும்பகர்ந்திடத்தூது
விட்டுமூத்தவனிங்குறுமளவுமீளாமே
யொட்டலானுடும்பொருதுமென்றுளந்தெளிந்ததன்பின்
வட்டவான்புகச்செலுத்தினன்வல்லதூதுவரை. (௬௦௨)

ஏறுமெய்துமெய்தாதவின்னுலகினைநோக்கித்
தூதரோடினர்துலங்குதேவாந்தகற்குரைப்பத்
தீதுறுதலனாகியநராந்தகன்சினந்து
காதனூரொடுபோர்செயாநண்ணினனம்மா. (௬௦௩)

வேறு

பாரமானமேருவன்னபாழிவில்வளைத்ததிற்
கோரமானவாளிகோடிகோடிதூண்டியார்த்தனன்
றீரனானதானவன்சினந்துதேவதேவனும்
வீரமார்ந்தவில்வளைத்துவெய்யவாளிதூவினான். (௬௦௪)

ஏற்றிதானவன்றொடுத்தவேவனைத்துமெம்பிரான்
மாற்றிவஞ்சன்வையம்வார்பதாகைவாவுமான்குடை
யாற்றல்சான்றபாகன்வில்லொடாவநாழிநீண்முடி
போற்றுகஞ்சுகங்குதம்பைபூண்களாதிநூறினான். (௬௦௫)

வாளியொன்றொடொன்றுதொட்டுவானவர்க்குநாயகன்
கோளனைத்தையும்புரிந்தகொற்றமுற்றுதானவன்
றோளிரண்டுமீர்ந்துதந்தைசூழலொன்றும்விண்ணக
ராளுமண்ணன்முன்னரொன்றுமாகவீழ்த்தினானரோ. (௬௦௬)

இற்றதோளிரண்டுமெங்ஙனேயெழுந்தொளிர்ந்தன
வெற்றிமேவுதானவன்வியந்துனையுண்முற்றுமென்
பொற்றதோள்சிரங்களைப்புராட்டினுங்கதித்தெழும்
வெற்றிகொள்ளவல்லையல்லைவிண்டுபோதியென்றனன். (௬௦௭)

போதியென்றிகழ்ந்துரைத்தபொக்கமிக்கதீயனை
நாதனோக்கியீசனீந்தநல்வரத்தினெல்லையுந்
தீர்தலுற்றதாலினிச்செருச்செயாண்மையுளவரை
யோதுசொல்லின்வென்றிமேவுமோவெனக்கிளந்துபின். (௬௦௮)

அனுதியேமலங்கணித்தவண்ணலானபண்ணவன்
றனுதுகைத்தலத்தினூற்றரப்பரிந்துகொண்டதோர்
பினுகாரியேற்றிமூன்றுபேர்மதில்வெறுக்கையுங்
கனுவெனப்படுத்தகோல்கடுத்தவாளிதூண்டினான். (௬௦௯)

தூண்டுவாளிசென்னியைத்துணித்துயிர்த்ததந்தைவாழ்
மாண்டமுன்றிலிட்டுமீண்டுவள்ளல்செங்கைவைகிய
தாண்டிமைக்குமுன்னாரந்தவாடவர்க்குநீண்முடி
மீண்டெழுந்ததன்னவன்விளைத்தமாதவத்தினால். (௬௧௦)

பூசலாற்றவண்ணலார்புறத்துநின்றவீரர்கள்
காசிமன்னனுதியோர்கள்கண்டிறந்தநீண்முடி
யீசனார்வரத்தினாலெழுந்துசிற்பினின்னவ
னாசமெய்தலெங்ஙனென்றுநன்றுளத்தழுங்கினார். (௬௧௧)

ஆக்கவல்லசெம்மலாயளிக்கவல்லமூர்த்தியாய்ப்
போக்கவல்லநாதனைப்பொருந்திநிற்குநாயகர்
மாக்கடற்பரந்தவையம்வானமெங்குநல்லொளி
தேக்கவேமதித்தவன்சிரத்தைமீட்டும்வீட்டுவார். (௬௧௨)

வேறு.

பகழியொன்றேவிநாதர்பாதகற்கெழுந்துநின்ற
விகலருந்தலையும்வீட்டியினிதாசானுந்தேவாந்
தகனுறைசபையிலிட்டார்தலையதுமுளைக்குந்தோறும்
புகழ்பெறவிலக்கம்வட்டம்பொருதறத்திறத்தாரன்றே. (௬௧௩)

ஆதவனுலகமாதியரிபயிலுலகீறான
மேதருமுலகர்தோறும்விரிந்தமாதிரங்கடோறும்
பூதல்வரைகடோறும்புணரிகடோறுமெங்கும்
பாதலின்றலைகள்வீழ்ந்துபருவரவுருளாநின்ற. (௬௧௪)

கைத்தலவீரன்காட்டிக்கணேசர்பினவுணர்கோமா
னெத்திறத்துயிர்களாலுமிரும்படையாதியாலுஞ்
செத்திடலின்மைதேர்ந்துசெறிந்தபல்லுலகுந்தாமா
மத்தருவடிவுதோற்றியற்புதந்திகழநின்றார். (௧௧௫)

காயகனுருவநோக்கிநராந்தகனிவன்போரஞ்சி
மாயையினுருவுகொண்டான்மற்றிவன்றன்னைநாமு
மாயையினுருவுகொண்டேமாட்டுதறக்கதென்று
பாயவையகத்திற்றானும்பருத்தபேருருவுகொண்டான். (௧௧௬)

மாற்றலனெண்ணநோக்கிமகோற்கடரவன்றன்மார்பங்
கீற்றுறக்காலின்வார்ந்தகேழ்விரலுகிராற்கீண்டு
பாற்றியொள்ளுயிரையாக்கைபடிமிசைசாய்த்துத்தேய்த்தார்
போற்றிவிண்ணவர்கள்கற்பப்புதுமலர்மாரிதூர்த்தார். (௧௧௭)

வருபடைவீரர்காசிமன்னவனாதியோர்கள்
பெருமகிழ்வுடையராகிப்பிரானடிவணங்கியிந்த
வுருவினைக்காணச்சற்றுமுரமிலரென்றானன்னோர்
பருவரலொழியநாதர்முன்புபோற்பாலரானார். (௧௧௮)

செங்களத்தினிதுநீங்கிச்சேனைகண்மருங்குசூழ
வெங்கணாயகனார்காசிநகர்புகுந்தார்தீயோன்
மங்கியதேனைதிக்கின்வாழ்பவர்க்குரைப்பான்போல
வெங்கதிர்ச்செல்வன்மேலைவிலங்கலின்கோடுசென்றான். (௧௧௯)

நன்மையேயில்லாநெஞ்சினராந்தகன்றனக்குத்தேக
மின்மையதாக்கிமுத்தியெம்பிரானினிதுநல்குந்
தன்மையையுரைத்தாந்தேவாந்தகனையுமடுபோராற்றிப்
புன்மையினகற்றிவீட்டிற்புகுத்தியமுறையுஞ்சொல்வாம். (௧௨0)

தருவளருலகிற்றேவாந்தகன்றனக்கெதிரேவீழ்ந்த
விருணிறக்குஞ்சிச்சென்னியிளவலதென்றுநாடி
யுருகினானங்குக்கண்டோருற்றிந்தமுடிபோற்சென்னி
குருதியொடுலகந்தோறும்விழுவனகோமானென்றார். (௧௨௧)

இரணவேற்றம்பிசென்னியெண்ணிலகாண்டலாலே
மரணமங்கவனுக்கில்லைமற்றவனொடுஞாட்பின்
முரணினைவிளைக்கவல்லான்முனிசிறுவனன்றியில்லைத்
தரணியினுமம்போதுமென்றனன்றருவர்கோமான். (௧௨௨)

நாடியபோரின்முன்னர்நராந்தகன்விட்டதூதர்
நீடியதுறக்கத்தெய்திநிருபனைவணங்கிச்சொல்வார்
மாடியந்தானைமன்னமாதவச்சிறானைக்காசி
கூடியமன்னன்மன்றல்குயிற்றுதற்கழைத்துச்சென்றான். (௧௨௩)

வழியிடைச்செல்லும்போதுவள்ளலேநுந்தைதம்பி
கழிபெருந்தவங்களாற்றக்கண்டுயிராழிதானங்குத்
தொழில்புரிமைந்தரேற்பவவரையுந்தொலைத்தானந்தப்
பழிதபநாடிநும்பிபலர்தமைச்சிறான்மேல்விட்டான். (௧௨௪)

விட்டவர்செய்தமாயைவஞ்சனைவிழுப்போரெல்லா
மட்டவருயிருமுண்டானுதலாலும்பிசென்று
மட்டவிழ்தும்பைவேய்ந்துமலைக்கின்றானெய்ப்புத்தோன்றி
யொட்டலனுயிரையுண்ணவுனைவரச்சொன்னானென்றார். (௧௨௫)

நன்றெனாகைத்துமன்னனம்படையெழுகவின்னே
யென்றனனனையபோதினீன்றவன்முன்றில்வீழ்ந்த
வன்றலேசோக்கினைமர்தன்மறிந்தனனென்றல து
பின்றனிச்சிவிகையேற்றிப்பெயர்ந்துமுன்னைத்துச்சொல்வான். ()

மைந்தனே நம்பிகாசிமன்னனேடமர்க்குச்சென்று
ளந்திடத்திறந்தான்போலுமவன்றலைமுன்றில்வீழ
விந்திடத்துய்த்தேன்கண்டாயினிச்செய்கசெய்கதென்று
புந்திநைந்துருகிக்கண்ணீர்பொழிந்துளம்விம்மினனே. (கஉஎ)

எம்பியின்சென்னியொன்றேயிடக்தொறுஞ்சென்னிசாலப்
பம்பிடக்கண்டலாலேபரமனார்வரத்தின்பேற்று
னம்பியன்னவர்க்குச்சாவுநண்ணிலதெந்தாயானு
மும்பரைவிட்டுப்போர்க்கங்குறுவலென்றுரைத்தான்மூத்தான். ()

வேறு.

தனையனுரைத்தமைகேட்டுத்தந்தைதனதிடஞ்சார்ந்தான்
வினைவலித்தசெயலறிந்துமிக்கபெருநாற்படையுங்
கனைகடலிற்றொகுத்தேவாந்தகன்கண்டுசிறப்பருளி
யனையபடைபுறஞ்சூழவவனியைநோக்குபுநடந்தான். (கஉக)

இடைநெறியிலாராந்தகன்வீழ்ந்திறந்தமைதூதவர்சொல்ல
வடையலரைப்புறங்கண்டவவுணன்றேவாந்தகன்றான்
கடையுகத்துக்கடல்போலக்கதித்தபெருந்துயர்மூழ்கிப்
புடையிருந்தார்நனிதேற்றப்பொருமலொழிந்துளந்தேறி. (க௩0)

எம்பிராராந்தகனுயிரையிறுத்தவனையிறுத்தொளிக
ளம்பரமுமெண்டிசையுமார்த்திடினல்லான்மறந்தும்
வம்பவிழுந்தொடைசார்ந்தம்வயநகணியாதிகளணியேன்
வெம்புபசிகெடவூணுமிசைகலேனெனக்கரைந்தான். (கஉக)

உருமினொடுமின்னேடுமொலிந்தபெருமழையேழு
மிருநிலத்திலிறங்குவபோலியமியம்பப்படைக்கலத்தின்
பெருகொளிவல்லிருள்சீப்பப்பேனுபடையொடும்போந்து
முருகுவிரிபொழிற்காசிமூற்றினன்றேவாந்தகனே. (க௩உ)

தம்பிமகோற்கடரோடுசெமர்த்தசமர்ச்சுவையறிந்த
வெம்புகதிர்த்தினகரனும்வேலையிடைவந்தெழுந்தா
னும்பர்களந்தகனைவொருதமயன்களத்தியற்றும்
பம்புபெருஞ்சமர்ச்சுவையும்பார்ப்பமுயன்றவன்போல. (க௩௩)

எழுகடல்போற்புறநகரினிறுத்துலம்பும்பெருஞ்சேனை
முழுதுமறிந்தொருதூதன்முழங்குபுகழ்க்காசிநகர்
விழுமியமன்னனையடுத்துவிண்ணவராந்தகன்போந்தான்
கழுமலறுமவன்சேனைகணிப்பரிதாமெனப்பகர்ந்தான். (க௩௪)

சாற்றுமுறைகேட்டுள்ளந்தடுமாறமன்னவன்பின்
றேற்றமுடையவனுகிச்செம்மலாரடிபணிந்து
போற்றிசெவோனின்றுமபோர்தனன்றேவாந்தகனே
கூற்றெனவன்னவனுயிரைக்குடித்தெனைக்காத்தருளென்றான். (க௩௫)

அஞ்சலைநீயெனவரசற்கருள்செய்துமகோற்கடர்தாம்
வஞ்சநெஞ்சம்பனிப்பவயங்கியபேருருக்கொண்டு
கஞ்சகிகர்கரகான்குங்காட்டியவற்றிடைப்பகழி
விஞ்சமொளிவான்பாசவியத்தகுபாசமுந்தரித்தார். (க௩௬)

சிங்கவாகனமுதுமிற்சித்திபுத்தியோடிவர்ந்து
திங்கள்வான்குடைநிழற்றச்சேண்வெளிவார்கொடிதூர்ப்ப
வெங்கும்பூதர்களைமிடையவிருபுடைசாமரையிரட்டத்
துங்கவார்முரசாதிதுவைப்பவெழுந்தருளினர். (௧௩௭)

அந்தரமேநெறியாகவணிநகரங்கடந்துபோய்
வந்துபுறஞ்சூழ்ந்தபெருமறப்படையையெதிர்நோக்கிச்
சுந்தரஞ்சேரிடப்புறத்துத்தோகையினைமுகநோக்கி
யிந்தவயப்படையழியவிரும்படைநீயாக்கென்றார்.(௧௩௮)

திருவருள்சென்னியிற்றாங்கிச்சித்தியவள்வலங்கொண்டு
மருமலர்த்தாமரைப்பதத்துவணங்கிமுகத்திடைநின்று
முருவவணிமாவாதியொளிவளரெண்சித்தியொடு
பொருதிறற்சேனைகளுங்கும்படைத்தனைத்துமப்பூத்தனளால். (௧௩௯)

ஊக்கத்தின்மிகப்பெரியவும்பர்கள்சேனையைநோக்கித்
தாக்கற்குப்புறஞ்சூழ்ந்ததானவர்கோனுரைசெய்வான்
மாக்கொற்றபடைத்தலைவீர்வம்மின்கள்பகைச்சேனை
தேக்குற்றவெழுகடல்போற்சேர்ந்தனவீங்கடுத்ததன்பின். (௧௪௦)

விம்மிதமாகியவிந்தவிழுப்படையொடமராற்றி
நம்முடலமிறக்தாலுநாமங்களிறவாத
வும்மையும்பேரொளியுமுறுமுலையாதுவென்றனமே
லம்மவவைபெறுவதற்கோரையமிலையேயதனால். (௧௪௧)

வேறுவேறணிவகுத்துமேவலான்பெருஞ்சேனை
நூறுவீரெனவிதந்துநுவன்றனன்றேவார்தகன்றான்
கூறுவாய்மொழிகேட்டுக்கோனைவலிப்படைத்தலைவர்
பாறுசேர்செங்களத்திற்பலவணியாயமரேற்றார். (௧௪௨)

உம்பர்கள்போர்த்திறனேக்கவுயர்வானத்திடைமிடைந்தார்
பம்பைமுதலியவியங்கள்பரவையெனவியம்பினவெண்
டும்பைமலர்த்தொடைசூடித்தொக்கவணிமாமுதலாம்
வம்பலர்மென்கூந்தலருமணிவகுத்துமறமேற்றார். (௧௪௩)

வேறு.

அணிமாவுடனேகத்தமனேற்றமர்த்தான்மகிமாவுடனெவர்க்கும்
பணியாவிலக்கச்சேனையனுய்ப்பகைமைபுரியேக்குமனுருத்தான்
றணியாவிலகிமாவோடுதாலசங்கனிகலேற்றான்
றிணிதோட்கிரிமாவொடுமேற்றான்றீர்க்கதந்தனெனுந்தலைவன். (௧௪௪)

தோலாப்பிராத்தியொடுகண்டாசுரனும்பிராகாமியையடுத்துக்
காலூர்த்தனுங்கனன்றிரத்தகேசிவசித்துவத்தினொடு
மேலாமீசத்துவத்தொடுபோர்மிகுந்துற்சயனுமமரேற்றார்
மாலாவேனைச்சேனைகளும்வழுதிரினதேதோடன்றனவே. (௧௪௫)

படைகள்பலவும்வழங்குவார்படையாற்படைகள்விலக்குவார்
குடையைநெடியகொடித்திரணக்கோலவூர்திதமையடுவார்
மிடையுங்கிரணமுடிகவயம்விசித்தமணிக்கச்சிவைதெறுவா
ரடைவஞ்சினமுஞ்சுடுமொழியுமறைவாரமரினிருவோரும் (௧௪௬)

அழைத்தசூரரொடும்பொருவாரறைந்தசமரேமிகவிளைப்பா
ரிழைத்தமொழிகண்முடித்தன்றியினியவுயிர்தாங்காரிறைவர்
தழைத்தவிழிநீருகப்பொருதுசாவார்தமக்குச்சார்வுறினும்
பிழைத்தமறம்வேண்டாரென்றும்பிழையாமறஞ்செய்வீரர்களே. (௧௪௭)

இரதத்தலைவர்பலர்வீந்தாரிபத்துத்தலைவர்பலர்வீந்தார்
புரவித்தலைவர்பலர்வீந்தார்பொருவேற்றானைபலர்வீந்தார்
பரதத்தலைவர்களும்வியப்பப்பலவாடினபேயொடுகைவந்த
மரவப்புனலூர்தியின்குருதியலைவாய்கிழித்துகிவந்ததே. (௬௪௮)

வேறு.

எருவைபருந்திவைதாங்களினிதுபயில்சுரத்தணங்கு
மருவுகளத்தினுஞ்சார்தல்வழக்கென்றுதுணிந்தனபோற்
பொருதிறரோக்குபுவைகும்புத்தேளிர்மனங்கவல
விருவிசும்பினிடமெல்லாமீண்டியுழிதந்தனவே. (௬௪௯)

வேறு.

துணங்கையலகைபுரிகளத்துத்தொக்குநரிநாய்விருந்தயரப்
பிணங்கள்பிறங்கச்சமர்பெரிதும்பேணிப்புரியுமமையத்தி
னிணங்கொள்படைத்தானவன்சேனைநிமலன்சேனையாலழிந்த
வணங்குமிடையார்படைத்தலைவர்வலியோடாவிமாய்த்தனரால். (௬௫௦)

வேறு.

கத்தமனைச்சிகைபிடித்துக்கனன்றுதிரித்தவனியிடை
மொத்தியணிமாவென்னுமுகிண்முலைப்பூண்மாதடர்த்தாள்
வைத்தமணிவேலோச்சிமணிமாவென்பாள்கவயம்
பொத்துடலெக்குமனுயிரைப்போக்கியணிந்தாள்வாகை. (௬௫௧)

வாளினாலெறிந்திலகிமாவென்னுங்குழற்கோதை
தாளினார்கழல்கலிக்குந்தாலசங்கனுயிர்மாய்த்தாள்
கேளிர்ரோர்சூலத்தாற்கிரிமாவென்பவள்கிளர்புத்
தேளிரோகையிற்றிளைப்பத்தீர்க்கதந்தன்றனையிறுத்தாள். (௬௫௨)

மாணுறுகண்டாசுரனைமலர்க்கரத்தாற்புடைத்தெழில்வார்
பேணுறுபூணிளங்கொங்கைப்பிராத்தியழிததான்வெகுளி
பூணாரத்தகேசனொடுபொருதவசித்துவமாது
வேணுறுசக்கரத்தவனையிறுத்தொளிதோற்றினளம்மா. (௬௫௩)

ஏந்தியவீசத்துவமென்றியம்பியகோற்றொடிமாது
ஆர்த்தகுவாளிகடொடுத்துத்தற்சயனாவியையுண்டாள்
காத்தபிராகாமியமாங்காரிகையோடமரேற்ற
சாத்துதொடைவேற்காலாந்தகன்வலியின்மேம்பட்டான். (௬௫௪)

திறங்கிளர்பொற்றேரினொடுநீண்டசிலைதுளாகப்
பிறங்குவலியிழந்தபிராகாமியத்தின்பேதொழிப்ப
மறங்கிளரும்வசித்துவந்தாள்வல்லையெதிர்போந்தமர்த்துத்
திறங்கிளர்காலாந்தகன்வன்சிரந்திருகிக்கடற்படுத்தாள். (௬௫௫)

தழல்விழிக்குந்திறற்காலாந்தகன்விளிந்தசெயனோக்கி
முழுவதிர்சேனைகளோடுமுசலனும்பல்லனுமேற்றா
ரழலெனக்கண்ணிணைசேப்பவழன்றுவசித்துவமாது
பழகியகைச்சிலைவளைத்துப்பகழிபலதூர்த்தனளால். (௬௫௬)

இருவரொடும்வந்தெதிர்த்தவிருஞ்சேனையிடைச்சிலசெங்
குருதியருவியிற்பாயக்குழைந்துநிலத்திடைச்சோர்ந்த
வுருவமுடிபுயங்கழற்காலூரந்துணியச்சிலமறிந்த
வெருவியிரிந்தனசிலவும்மெல்லிழைமான்பொருகணையால். (௬௫௭)

சேனைமுழுவதுமுலைந்தசெயனோக்கிச்சினங்கடவ
மோனையெனநின்றபெருமுசலனும்பல்லனுஞ்சிலையிற்
சோனைமழையெனப்பகழிதூண்டியமர்பெரிதாற்ற
மானைநிகர்மழைமதர்க்கண்வசித்துவமாதுளர்ந்தளர்ந்தாள். (௬௫௮)

துப்பதரவசித்துவமான்சோர்வறிந்தவணிமாவங்
கொப்பரியதுணையாகியொருக்குசமர்பிகப்புரிந்தான்
செப்பருமாதர்களிருவர்சேர்ந்துசமர்புரிந்தழியும்
வெப்புடையவீரரவர்வினைத்திறத்திற்றாழ்ந்திலரால். (௧௦௯)

மலைகுலையும்வயப்பெருந்தோண்மன்னர்வழங்கியபடையாற்
சிலைகுலையுந்தனமாதர்செம்பொன்மணித்தேர்குலையத்
தலைகுலையமுலைகுலையத்தயங்கியபூங்கலைகுலைய
நிலைகுலையுமுளத்தினராய்நெட்டுயிர்த்துவெயர்த்தனரால். (௧௧௦)

பீடழிந்தசெயலேனைக்கப்பிரத்தியுமீசத்துவமு
மாடணுகிமுசலனொடுமறந்தணியாப்பல்லனொடு
நீடமர்செய்தவருயிரைநெடுவிசும்பேற்றினரிவ்வா
ரூடமர்செய்தலைவரெல்லாமழிந்தனரெண்மரினம்மா. (௧௧௧)

தன்னுடையபெருஞ்சேனைதாரணியினுடல்கிடத்தி
மின்னிடைவானிடைமுழுதுமேவியதுதேர்ந்தவுண
னின்னதற்கஞ்சுவதில்லையெனவெள்ளிதனைநினைந்தா
னன்னவர்திறந்தபடையனைத்தினையுமெழுப்பியதே. (௧௧௨)

வேறு

அழிதருசேனைகளார்த்தெழுந்தமை
விழியினீசத்துவம்விளங்கநோக்கினாள்
பொழிசினமீக்கொளப்புருவங்கோட்டினாள்
செழிசினத்தொருமகள்சிறப்பத்தோன்றினாள். (௧௧௩)

துள்ளியவெகுளியிற்றோன்றுமாதரான்
வெள்ளியையிழுங்கினன்விசும்பிற்சென்றனை
டென்னுமீசத்துவஞ்சினந்ததீயினால்
வின்னரும்பெரும்படைமீட்டுமாய்ந்ததே. (௧௧௪)

விளங்கியதன்படைமீட்டுமாய்ந்ததுந்
துளங்கிடையொருமகடுய்த்துவெள்ளியைக்
களங்கமில்வானிடைக்கரந்துசென்றது
முளங்கொடுதானவனுருத்தெழுந்தனன். (௧௧௫)

கொலைமுகக்கூற்றெனக்குறுகிச்செங்கையிற்
சிலைவளைத்துறுவளிசெறிந்தசிந்துவி
னலையெனநிரைநிரையம்புதூவினு
னிலைமுகப்பூண்முலையெண்மர்சேனைமேல். (௧௧௬)

விரைகமழ்தும்பையின்விளங்குதம்புயம்
புரைதராதெனத்தொழிலபுரிந்துகாட்டியாங்
குரைவளர்பூதர்களுடன்றுடற்பல
வரைபெயர்த்தவுணர்கோன்மார்பினேச்சினான். (௧௧௭)

இகர்திடம்பட்டனமேனும்பூதராற்
றிகழ்ந்ததானவனுடல்சிதர்த்திட்டாயினு
முகர்திடுவாமெனவோச்சும்வெற்பினை
முகர்தவன்மார்பின்மண்ணுதிர்ந்தமுற்றுமே. (௧௧௮)

வெள்ளிலங்கனியினைவெற்பினேச்சியாங்
கள்ளிமேலெறிந்திடுமெக்கறாள்பட
வொள்ளியசாரதருவந்துபொன்னெனத்
தெள்ளியபடைக்கலச்செருச்செய்தாரரோ. (௧௧௯)

வழங்கியபடைக்கெதிர்வழங்கிப்பல்படை
தழங்கியசாரதர்தங்கள்மெய்யெலாங்
கழங்குறுகளியெனக்கணைகளேற்றினன்
முழங்கியபேரொலிமூர்க்கனென்பவே. (௧௭0)

சாரதர்மனவலிதளர்ந்துநின்றனர்
வாரணிமுலையணிமாமுனென்மருங்
தேரவனெதிருறச்செலுத்திவேறுவே
றோரணிபோர்பலவியற்றினாரரோ. (௧௭௧)

வையமேனின்றவெண்மாதர்தம்மையும்
வையமேகிறுத்தினன்மறங்கொடானவ
னையெனப்பாய்ந்தணிமாவன்ஞன்புயங்
கையணிவாளினாற்கனன்றுவீசினாள். (௧௭௨)

பாழிவாளிருதுணிபட்டுவீழ்ந்ததங்
கூழிவாய்நெருப்பெனவுருத்துத்தானவன்
வாழிவாளெதிரவண்மார்பிலோச்சினான்
வீழிவாயவளதைப்பறித்துவீசினாள். (௧௭௩)

பொன்னணிமுடிமணிபொடிந்துதூளியாய்த்
துன்னலின்மெய்யெலாந்துதையவோச்சுவாள்
சென்னியிற்பட்டெனச்சின்னபின்னமாய்
மன்னியநிலத்திடைவயங்கவுக்கதே. (௧௭௪)

மூரிபுருவத்தினாண்மூக்கைக்கொய்துமென்
றெரியுகுவிழியினான்சுரிகையேந்தினான்
றெரியிழைமாதுதன்செங்கைதாங்கிய
சுரிகையினெறிந்ததைத்துணித்துமீண்டனள். (௧௭௫)

இளமதிநிகர்நுதலேந்துபூண்முலை
வளர்மகிமாவெனுமாதுசெங்கையிற்
றளர்வறவேந்தியசக்கரத்தினாற்
களமலிதானவன்கவிகைவீழ்த்தினாள். (௧௭௬)

வலத்துயர்தானவன்மானமேற்கொடு
நிலத்திடைக்குதித்தனனேர்ந்துதண்டினா
லலத்தகச்சீறடியவரெல்லாரையுஞ்
சலத்துயர்வெகுளியாற்றாக்கினனரோ. (௧௭௭)

நால்பொரவிளங்கொடிகதழ்ந்துசாய்ந்தெனச்
சால்பொருவியவுளத்தருவற்காற்றிலர்
நூல்பொருமிடைக்கொடிநுடங்கநொந்துளம்
பால்பொருமொழியவர்பலருநீங்கினார். (௧௭௮)

சித்திராவிருவருஞ்செருவினீங்கிய
தத்தையோர்ந்துள்ளகத்தரும்புமானத்தாற்
புத்திநாயகனடிபோற்றித்தாளொரு
சத்தியானனத்திடைசாரத்தோற்றினள். (௧௭௯)

வேறு.

மலைநிகர்முலையுந்தோள்களுநிகராளவதனமும்வான்றொடுமுடியு
நிலவுமெண்டிசையுஞ்சலவுசெஞ்சடையுநெருப்புமிழ்செய்யவாள்விழியுங்
கொலைகெழுபடைகடாங்கியகரமுங்குவலயத்திடைந்தொறுஞ்சேடன்
றலைகளாயிரமுநெரிதருபதமுந்தயங்குமச்சத்திமுன்பணிந்தாள். (௧௮0)

பணிந்ததன்மகளைப்புத்திமானேனுக்கிப்பறந்தலையுழக்குபுவாகை
யணிந்தபின்வருகவென்றனளவளுமதற்குடனிசைந்தனளேகித்
திணிந்ததோளவுணச்சேனையிற்பாய்ந்துசெங்கணலுயிர்ப்பினுற்றாளாற்
றணிந்தகைத்தலத்தால்வாயினாற்படையாற்சாடினளொருநொடிப்பொழுதின்.

அழுங்கியதனதுசேனையைநோக்கியவுணர்கோன்கொடுமரம்வாங்கி
யொழுங்கியபகழியளவிலதொடுத்தானொண்டொடியஃதெலாம்வாயால்
விழுங்குபுசென்றசுராந்தகன்றனையும்வெய்துகையெடுத்தனள்விழுங்கிச்
செழுங்களத்தொழிந்துபுத்தியையடைப்பச்சென்றனள்செல்லுறுநெறிக்கண்.

வரத்தினாலியாச்சுராந்தகன்சூக்கவடிவெடுத்தவள்வயினொழியக்
கரத்தல்செய்வாயால்வெளிக்கொடுபோகிக்காத்திரமெனப்படுந்தனது
புரத்தினையடுத்தான்பூவையுமீன்றபுத்தியையடுத்துமென்பதத்திற்
சிரத்தினைவணக்கிப்புகழ்பலவோதித்திருந்தமுன்னின்றிதுசொன்னாள்.

அன்னைநீயருளிச்செய்தவாறேகியளவறுசேனையுமழித்துத்
துன்னலானசுராந்தகன்றனையுந்தனையவாய்மடுத்தகட்டிடையே
மன்னுறவிடுத்தேன்சூக்குமவடிவாய்மற்றவன்வெளிக்கொடுபோந்தா
னின்னுமவ்விரும்போரியற்றிடிற்றப்பாதிறப்பலென்றியம்பினளிருந்தாள்.

காத்திரபுரத்திலடுத்தவன்றந்தைகழலிணைவணங்கிமுன்னின்று
தோத்திரஞ்செய்துதோல்வியைக்கிளந்துதுன்னலான்றனையினிப்பொருதோர்
மாத்திரைப்பொழுதின்வெல்வதுவேண்டுமற்றதற்குபாயஞ்சொல்கென்றான்
சாத்திரமுணர்ந்ததாதைகேட்டுன்னித்தனயனுக்கிதம்பெறச்சொல்வான்.

மந்திரமொன்றுகிளக்குதுங்கேட்டுமைந்தனேவழுவறக்கணித்துச்
செந்தழல்வேள்விபுரிமதியதனிற்செறியுளைச்சுவற்பரிமாவொன்
றிந்திரன்முதலாமமரர்மாதவர்களனைவருநடுங்கிடத்தோன்று
மந்தவெம்புரவிமேல்கொடுபெரும்போராற்றுதிவெல்வையென்றுரைத்து.

வழுவறுபீசங்கூடியவகோரமந்திரஞ்செவியுறக்கிளந்து
விழுமியமனுவைக்கணித்திடுமுறையும்விரித்தனன்வியப்பொடுகேட்டான்
செழுவியதேவாந்தகனதுகண்டுதினகரன்வெருவினன்போல
வொழுகொளிக்கிரணமுழுவதுஞ்சுருக்கியொலிகடற்புக்கொளித்தனனால்.

அற்றைநாளிரவிற்சுராந்தகனந்தமந்திரங்கணித்தறுகோண
முற்றுறக்குண்டமிட்டொளிர்செந்தீமுறையுளிவளர்த்திரும்பொருள்கள்
பற்றொடுமெடுத்துமடுத்தனனதனிற்பருத்தமைநாகமேயொப்ப
வெற்றிசெய்கருமைக்குதிரையொன்றெழுந்துவிளங்கியதுலகெலாநடுங்க.

கையினாலோச்சியண்டமும்பொதிர்க்குங்காழ்வலிவீரருமநேகர்
வெய்யவான்படைகளேந்துகைத்தலராய்விளங்குமத்தழலிடையெழுந்தார்
உய்யலாமார்க்கம்வேறுமுண்டோவென்றவர்துதேவாந்தகனென்பான்
பொய்யெலாங்கழியப்பூரணாகுதியும்புரிந்துவேள்வியைமுடித்திட்டான்.

வென்றிமிக்குளதாய்வேள்வியினெழுந்தவிலாழிவாய்ப்பரியினைநோக்க
வொன்றியவிழைவாலேழெழும்புரவியொளிமணித்தேரொடும்போந்தாங்
கென்றநீள்புணரிமுகட்டின்வந்தெழுந்ததிலகிடநாட்கடனவுண
னன்றுசெய்துவப்பகான்மறையோர்க்குநால்வகையுண்டியுங்கொடுத்தான்.

சீலவான்வரைப்பிற்பாதலமருங்கிற்றிகழ்ந்தமண்வைப்பினெண்டிசையின்
மூலமாயிருந்தபடையெலாங்கவிமுடிகுழைபூண்முதலணியுங்
கோலமாரிரதங்கரிபரிபண்டியுங்கொடுத்துடன்கொண்டழற்பிறந்த
நீலவாம்பரியினிவர்ந்துமுன்போலநெடுங்களத்தெய்தினனவுணன். (௩௬௧)

நெருநலிற்கதிரோனீங்கியமாலைநேர்ந்தசெங்களத்தினின்றேகித்
திருநகரடுத்துக்கண்படைகொண்டுதினகரனுதயமாம்விடியற்
கருணைநாயகருநாட்கடன்கழிப்பிக்கணிப்பறுசேனையோடெழுந்து
பொருகளமடுத்தார்சூரன்முன்போர்க்குப்புக்கனனணிவகுத்தம்மா. ()

சித்தியெண்மர்களும்புத்தியீன்றெடுத்ததிகழ்பவுத்தேவியுஞ்சித்தி
சத்திபாலெழுந்தசேனையுந்தலைவன்றந்திடும்பூதரும்பலரும்
வைத்தகைப்படையோடணிவகுத்தெதிர்ப்பமாற்றலன்சேனையும்வெவ்வே
றுத்தபல்லணியாயெதிர்த்தனநெடும்போரோங்கினவிருதிறத்தவர்க்கும். ()

வேறு.

இரதமொடிரதமிவுளியொடிவுளியுமிபத்தொடணிபமுமிசை
விரவியவயவரின்வயவருநேர்ந்துகைவேல்கொடுசமர்செய்வார்
சரமழைபொழிகுவர்நாந்தகம்வீசுவர்சக்கரமெதிருய்ப்பார்
பரசவையெறிகுவர்பாசமிக்கோச்சுவர்பல்படையுந்தொடுவார் (௬௯௪)

மின்னொடுபுரைவனவிதிர்த்திடுவாளயில்வெடிகுரலுருமோடு
தன்னொடுபுரைவனவோதுவில்லிந்திரதனுவொடுபுரைவனமெய்ச்
செந்நிறநீருகுவனமழைபுரைவனசேனைகள்முகில்புரைவ
வந்நிலையிடுபடைதொடவிழுகவிகைகளாம்பிகள்புரைவனவே. (௬௯௫)

பொதியுடலொடுமறுகுடரினமொழுகுசெம்புனலொடுமலைவனநல்
விதியொடுமறுதலைமணிபடுமுடியொடுவியத்தகவுருள்வனவிண்
மதிபுரைகுடையொடுகொடியினமிடையறமாதிரமேற்பெயர்வ
துதியொடுமலகைகணடமிடுவனபலதொகுவனநரியொடுநாய். (௬௯௬)

மண்ணிடையயில்பொருபுண்படுதமதுடல்வைத்தெழுவயவரெலாம்
விண்ணிடையிரவிமெய்புண்படவதனிடைவியனுடல்வழியேகி
நண்ணியதமதுதெய்வதவுருவெழிலினைநாடரமகளிர்களைத்
திண்ணியமதன்விடுகணைபொருபுண்படுசிந்தையராகினரே. (௬௯௭)

விரவியதமதுயிரமரர்களெழிலுறுவிரவிவிண்ணுலகமதி
னரமகளிர்கணலமிரவொடுபகலுநரதிசயமதுதெரியாப்
பரவியமகிழ்வொடுநடமிடல்புரைவனபடைபடுமுடியினொடு
சிரமறநிலையுறுகுறையுடலாடுவசெங்களமழகுறவே. (௬௯௮)

தேரினையிரதமுமட்டனகரிகளைத்தின்கரிகளுமட்ட
போரினவிவுளியையிவுளியுமட்டனபொருதெழுதானைகளை
யேரிவர்தானையுமட்டனவினமெனவெண்ணுவதில்லாமே
பாரிடையிகலுறுபகையுறினினமெனப்பார்ப்பதுமுளதாமோ. (௬௯௯)

வேறு.

இன்னவாறுசெங்களமதுபொலிதரவிருஞ்சமர்புரிகாலைத்
தன்னைநேர்வருங்குரூரனேவியபடைதாக்கலின்வலிசிந்தித்
தன்னுதானவப்படைமுழுதுடைந்தனசுராந்தகனதுநோக்கி
மன்னுவார்சிலைவணக்கிவாளிகள்பலமழையெனச்சொரிந்தார்த்தான்.

இரதமட்டனவிரதமூர்வீரர்களின்னுயிர்முழுதட்ட
கரிகளட்டனகரிகளூர்வீரர்கள்கதிர்மணிமுடியட்ட
பரிகளட்டனபரிகளூர்வீரர்கள்பலவுறுப்பையுமட்ட
வுரியதானையுமட்டனசுராந்தகனுந்தியகணைமாரி. (௭0௧)

சேனைமாய்ந்தனசித்திகாலிருவருஞ்செருத்திறத்தினிற்றீர்ந்தார்
மானைநேர்விழியாள்பவுத்தேவியும்வருந்தினண்மலைத்தாங்கு
தானைகாவலனுகியகுரூரன்முன்சார்ந்துதானவர்போற்றுங்
கோனைநேர்ந்தமராடினன்வரைபொருங்கொடுமரங்குனித்தெய்து. ()

வரைகிழித்தனவானகங்கிழித்தன மாதிரங்கிழித்திட்ட
தரைகிழித்தனசாகரங்கிழித்தன தருவர்கோன்மேம்பாட்டா
னுரைகிழித்தன மகோற்கடர்திருமுகத்தொய்யென வெளிக்கொண்ட
புரைகிழித்தமெய்க்குரூரன்கைச்சிலைமுகில்பொழிதருகணைமாரி. ()

வேறு.

வலியின்மேம்படுசுராந்தகன்வழங்கியவாளி
நலியயாவையுமாற்றியோர்கணையினைநடவி
மெலிவிலாவவன்கைச்சிலைவீழ்த்தனன்குரூரன்
கலியன்றொருசிலைகொடுகணைபலதொடுத்தான். (௪0௪)

மீட்டுமேல்வரும்விசிகங்கள்விலக்கியகுரூரன்
சேட்டுவாளிகண்மூன்றுநேர்செலுத்துபுதீயோன்
சூட்டுமாலிகைச்சுடர்கொழிதுாமணிமௌலி
யோட்டுவார்செவிக்குண்டலமிரண்டையுமுகுத்தான். (௪0௫)

மணியிழந்தபைநாகமேயெனமருவாதா
னணியிழந்தமைநாணினன்சினமுகத்தோங்கத்
துணிவிழந்திலன்றொடுத்தனன்வியாக்கிரப்படையைத்
தணிவிழந்ததுசார்ந்தது தக்கபல்லுருவாய். (௪0௬)

அரக்கெறிந்தசெந்தாமரையனையகட்குரூரன்
கரக்குன்றத்திரங்கடாயினன்கதழ்ந்ததுபலவாய்த்
தரக்கணத்தையுந்தாட்கிழித்தெறிந்துசற்றேனு
மிரக்கமில்லவனுயிருணவெழுந்ததுமாதோ. (௪0௭)

கடங்கலுற்றியமுகத்தொடுங்கதழ்ந்திபமடுப்ப
மடங்கன்மாப்படைதொடுத்தனன்வாளவர்பகைஞன்
றடங்கைவேழங்களனைத்தையுஞ்சடுதியிற்சாடி
விடங்கொளுக்கொடுங்குரூரனைமேவியததுவே. (௪0௮)

சிம்புண்மாப்படைதொடுத்தனன்றேவரைப்புரப்போன்
வெம்பிமேல்வருங்கேசரிப்படையினைவிளித்து
வும்பரார்தமைத்தேய்த்தவனுழைப்புகுந்ததுமன்
கம்பியாதவனப்படையேகடிதுகைத்தான். (௪0௯)

வார்ந்தவன்சிறையான்மிகவெறிந்தும்வள்ளுகிராற்
சார்ந்துகிறியுந்தடவுவாயலகினுற்பொதிர்த்து
நேர்ந்திரும்படையிரண்டுநீங்கெலாமழிப்ப
வோர்ந்துமீட்டனர்விடுத்தவரொய்யெனத்தம்பால். (௪௧0)

உருவவாளிஞலோச்சுவான்குரூரன்முன்னுற்றான்
வெருவினன்பொரத்தானவன்விண்ணிடைக்கரந்தான்
பொருவிலாவிவனோநமைப்புரட்டுவான்போலுஞ்
செருவின்மேம்படலாயினனெனவுளந்திகைத்தான். (௪௧௧)

ஏகவாணையிற்சுராந்தகனெடும்பொழுதெண்ணி
மோகமாப்படைசேனையைமுற்றுறவிடுத்தான்
வேகமாகியகாந்தருவப்படைவிழுப்போர்த்
தாகமேவியகுரூரன்முன்சார்தரவிடுத்தான். (௪௧௨)

பயிலுநாற்பெருஞ்சேனையுமோகமாம்ப்படையாற்
றுயில்விராவினகாந்திருவப்படைதன்னிச்
செயிரிலாதகந்திருவர்கள்பலரெனத்திகழ்ந்தங்
கயிர்தராவகைப்பாடலாடல்களமைத்ததுவே. (௪௧௩)

போர்க்குடைந்தவன்மீட்டுறப்பொருதுமென்றலகை
யார்க்கும்வன்களத்தமர்ந்தருள்குரூரனப்படைதான்
தேர்க்குமுன்செயுஞ்செயலினையுள்ளதாச்சேர்த்துப்
பார்க்கவுந்தகக்கேட்கவும்பற்றினன்மனமே. (௭௧௪)

வென்றிவாய்ந்ததுநமக்கெனவிண்ணவர்காலன்
சென்றபோர்க்களத்திடைத்திரிகோணகுண்டமுமிட்
டன்றோராயிரமவுணரையறுத்தவர்தசையுந்
துன்றுமாயிரங்குடத்துறுசோரியுமீட்டி. (௭௧௫)

பஞ்சசன்மவாதனத்திடைப்பண்பொடுமிருந்து
விஞ்சுமுக்கிரவேள்வியொன்றாற்றினன்விரைவில்
வஞ்சன்முன்னரவ்வன்னியிலொருமகட்பூத
மஞ்சமுச்சகத்துயிரெலாமார்தவெழுந்ததுவே. (௭௧௬)

வட்டமாய்ப்பெருத்தகன்றகண்களுமதிக்கீற்றி
னெட்டெயிற்களுமோங்கனேர்முலையுமாகாய
முட்டுகேசமுமுழைபொருவாயும்பேருருவு
நெட்டுயிர்ப்புநீள்சீற்றமுமுடையவப்பூதம். (௭௧௭)

தன்னைத்தோற்றியசுராந்தகன்றனையெதிர்நோக்கி
வன்னித்தீயெனவாட்டுவதிரும்பசியதனை
மன்னர்க்கேறனையாயினிமாற்றுகவெனலு
முன்னர்ச்சோர்ந்தவான்சேனையையுணவவன்மொழிந்தான். ()

தொடுத்தமோகவான்படையினாற்சோர்ந்தசேனைகளை
யெடுத்துவாய்ப்பெயச்சென்றதங்கிரும்பெரும்பூத
மடுத்தபோர்க்களச்செயலெலாந்திருவுளத்தறிந்தார்
மடுத்தகாதலினடியவர்க்கருள்புரிவரதர். (௭௧௯)

கண்டைவான்படைக்கப்படைகொடுக்கனர்கண்டை
மண்டுசேனையிலனந்தமாய்ப்படர்தலுமோகம்
விண்டசேனையதேகலுங்குரூரன்முன்விநோதங்
கொண்டகாந்தருவப்படைகுலைந்துநீங்கியதே. (௭௨௦)

பட்டிமைக்கொருபிறப்பிடமாகியபூதக
னெட்டிமுற்றுவித்திடும்புணர்ப்புணர்ந்துபின்குரூர
னட்டிமைக்குமுன்வாவெனவமர்பவக்கேவி
முட்டிமைத்தமெய்ப்பூதத்தின்மொய்யமர்விளைத்தான். (௭௨௧)

சண்டமாருதமிரண்டெதிர்த்தாலெனத்தழங்கி
யண்டம்யாவையுஞ்சுற்றினரலைகடற்சுழன்று
ரொண்டராதலஞ்சுலாவினருரகர்கள்வாழ்க்கை
கொண்டபாதலங்குலாவினர்கொதித்தமராடி. (௭௨௨)

உலகமெங்கணுமமர்புரிந்துழிதருவேலை
கலதியேபுரிபூதத்தைக்கைத்தலம்பற்றி
யிலகுசீர்ப்புவுத்தேயியங்கெடுத்துமண்ணிடத்தி
யலறவோரடிமிதித்துமற்றடியினைக்கிழித்தான் (௭௨௩)

கிழித்தகீற்றினுள்ளொன்றனைக்கீழ்க்கடலெறிந்தான்
கொழித்துவெள்ளலைத்திரைதவழ்குடகடற்பரப்பிற்
றெழித்துவீசினனொன்றனைச்செருக்களநீங்கி
விழித்துமேதகுவரமருள்புத்தியைச்சார்ந்தான். (௭௨௪)

ஆற்றன்மேம்படுபூதத்தினழிவினைநோக்கிச்
சுற்றநேர்வருஞ்சுராந்தகன்கூவிரிசடவி
யேற்றமாயெசிலைவளைத்தெறுழ்க்கணைதொடுத்தான்
மாற்றிவாளிகள்குரூரனும்வழங்கினன்விசிகம். (௭௨௫)

புங்கவாளியிலிருவரும்பொருதழியவுணன்
றுங்கவானிரததினைத்துட்படுத்தார்த்தா
னெங்கணுயகனேவியவீரன்வேறிரதந்
தங்கினூர்னன்குரூரன்பொற்றேர்தகுவனுமே. (௭௨௬)

வேறு

பன்முறைவாம்பரிவையமறுப்பர்கள்பாகரைவீட்டுவர்கள்
வன்மையினேர்தியகைச்சிலைநூறுவர்வார்கொடிவீழ்த்துவர்கள்
பொன்முடிதள்ளுவர்சாலிகைதாழ்த்துவர்போக்குவர்வெண்கவிகை
யின்னணமாகவிருஞ்சமராடினரெய்திருவோர்களுமே. (௭௨௭)

மீதலமேழினுமெய்துவரெட்டெனும்வேலையுமெய்துவர்கள்
கோதறநேமிநெடுங்கிரியாகியகுன்றினுமெய்துவர்கள்
பாதலமேழினுமெய்துவராடகர்பற்றினுமப்புறமார்
மேதகுவைப்பினுமெய்துவர்மீளுவர்வெஞ்சமராற்றினரே. (௭௨௮)

தொக்கசிலைச்சமராடொழியன்னவர்சூழ்ந்திடையேயிடையே
சக்கரமுந்துவர்பரசம்விடுப்பர்கடண்டமுகைப்பர்மிக
நக்கயில்வேலெறிவோர்கதையோச்சுவர்நாந்தகம்வீசுவர்கண்
முக்குடுமிப்பெருவேல்கடைத்திமுடுக்குவர்தோமரமே. (௭௨௯)

நீடமரின்னணமாடியபோதுநிசாசரன்வையமிசைப்
பீடமர்வெய்தியபாய்ந்துகுரூரன்பிடித்தகைவச்சிரத்தாற்
பாடமர்மார்பிடையெற்றினன்மீண்டனன்பண்ணவர்தம்பகைஞன்
சேடமராண்மைகுறைந்தவிழுந்துதிகைத்துயிர்சோர்ந்தனனே.(௭௩0)

உயங்கிமயங்கியசோகமொழிந்துணர்வெய்தியெழுந்தவுண
னியங்குகுரூரன்வயப்பரிவையமதெய்துபுகைக்கதையாற்
புயங்களிலெற்றினனன்னவனுவிபுலர்ந்துமயங்கியது
தயங்கியசேனையுலைந்திரியச்சமராடினன்பின்றகுவன். (௭௩௧)

வேறு.

சூரனுங்குரூரனுவிசோர்ந்துதேரின்வீழ்ந்ததும்
வீரரோடுசேனையாவும்வெய்யவுற்குடைந்தது
நாரணுதியோர்களுடொணுதகாதனுபெ
சீறுதகூவிரத்ததேர்கடாய்முன்னின்றனன். (௭௩௨)

தேவர்காலனனவீரன்சீற்றமிக்குறைக்குவன்
றூவுறுதமாதவர்தழாதவெம்பியாவியைத்
தூவறுதனாட்பிடைத்தொலைத்துளாயதைக்குறித்
தேவராலும்வெல்லொணுவெனக்குமாறபட்டனை. (௭௩௩)

விண்ணுளாரும்விண்டுவும்விரைத்தகஞ்சமேவுமெண்
கண்ணினுனுநெற்றிமுற்றுகண்ணினுனும்யாவரு
மெண்ணிலாதநாளொருங்கெழுந்துபோர்கடத்தினு
மண்ணலானவென்னைவென்றகன்றுபோவதில்லையே. (௭௩௪)

இன்றுநின்றன்வீரர்யாருமென்னுனின்றுபோரினல்
வென்றிகொண்டிலார்களர்தவீணர்போலநீயுமே
மன்றமாய்குவாயவர்துவாரைகருடுவாயலே
யொன்றுறுதவாழுமாறபுத்திசெய்யினீதுகேள். (௭௩௫)

உய்யவென்னைவிட்டனையொருத்தனேநிலத்திடைக்
கையிலேந்தவன்படைக்கணத்தையிட்டெப்போர்துநின்
னையாம்மைதன்புறந்தடுத்துவாழ்தியென்றனன்
ஐயம்யாவுமுய்யவந்தவள்ளல்கேட்டுரைப்பரால் (௭௩௬)

வேறு.

வானிலமுழுதுந்தன்பம்வளர்த்தபுல்லறிவோய்நீயு
நானிலமுழுதுந்தன்பனாட்டுநின்னிளவருனு
மூனமில்வயிற்றுதரகுலாயுற்றநாளாதியாக
வீனமினெருநல்காருஞ்சகோதரமென்னவாழ்ந்திர். (௭௩௭)

அத்தகுமிருவீருள்ளுமொருத்தனையமரனுக்கி
வைத்தனந்துறக்கவைப்பின்மருங்குமுன்போலவாங்கு
வித்தகமானசேனைமேவிடவைத்தாமேனு
மொத்திடுசகோதரத்தினொழிதுயரெவர்க்குமுண்டே. (௭௩௮)

ஆதலாலவற்குநீயேயருந்துணையாகுமாறு
மேதமில்களத்திற்பட்டங்கெய்தியநினதுசேனை
காதலினினையேவேர்தாக்கைக்கொளுமாறுமின்னே
மேதகநினையுந்தேவனுக்குவல்லெருவலென்றார். (௭௩௯)

வேறு

என்றநாதரியம்பவெஞ்சினமீண்டுதேவர்களந்தகன்
வென்றிவார்சிலைகோட்டியம்புவிடாதுபற்பலதூண்டினான்
றன்றவாளியறுத்திருங்கணையோரிரண்டுதொடுத்தவ
னொன்றுதூணியும்வில்லுமட்டனரும்பர்போற்றுமகோற்கடர். (௭௪௦)

வேறுகார்முகம்வாங்கியாயிரம்வெய்யவாளிமகோற்கட
ரேறுதேர்மிசையுந்தினனிமையார்களந்தகனன்னவை
மாறுமாறுவிலக்கிமுக்கணைவல்லையேவிலையம்பரி
தேறபாகுமொருங்கறுத்தனர்தேவர்போற்றும்விநாயகர். (௭௪௧)

விண்ணுளார்பகையானபாதகன்வேறுதேரினிவர்ந்தனன்
வண்ணமார்பதினாயிரங்கணைவாங்கிவிட்டனனன்னவை
யண்ணலார்பலவாளிதூண்டியறுத்தொருங்கவன்மேவுதே
ரெண்ணிலாதனசேமவையமுமேந்துவில்லொடுநூறினர். (௭௪௨)

குரங்குளைப்பரியேறியூர்ந்துகொடிஞ்சிவானிரதத்தமர்
வரங்கொளுயகர்மாபிலோச்சினன்வாளினாலவுணர்க்கிறை
கரங்கொள்வாளொடுகேந்துசங்கடிதேநிலத்தின்மறிந்துக
வரங்கொல்கூர்மழுவாற்றுணித்தனரந்தரர்க்கிடர்தீர்ப்பவர். (௭௪௩)

அந்தரத்தினெழுந்துதேவர்களந்தகன்வருணப்படை
முந்தவுந்தினனேனைவானவர்மூரிமாப்படையுந்தக
வுந்தினனலவயாவும்யாவருமுய்யவந்தமகோற்கடர்
சிந்தினார்மிகுதேவர்தம்படைதேர்ந்துவேறுசெலுத்தியே. (௭௪௪)

உருத்திரப்படைதூண்டினானுரமிக்கதானவர்கோமக
னுருத்திரப்படையேசெலுத்தினரும்பர்தம்பெருமானுமே
குருத்தெழுந்தவையோரிரண்டுமுராயமர்த்தலகேளழயு
மூருத்தவச்சித்தர்செய்யமீட்டனருந்தினரிருவோருமே. (௭௪௫)

அழித்தவையகமீளவாக்கியலங்கும்மப்படைவிட்டவர்
செழித்தகைத்தலமுற்றபின்செயிராரக்கசானவன்வெஞ்சினங்
கொழித்தமாயைகளெண்ணிலாதகுயிற்றினனவையாவையு
மொழித்திடின்றனர்ஞானமாப்படையுந்தியெங்கள்விநாயகர். (௭௪௬)

கடிதராதமரின்னவாறுகலந்தொர்வைகலெலாஞ்செய்தார்
விடியலாகியகாலையெய்தவிளங்குமெங்கண்மகோற்கடர்
முடிவிலாதகன்பெற்றநல்வரமுன்னியானைமுகக்கொடு
தொடிவிராவியகையினுற்சுடர்கோட்டொன்றுதணித்தனர். (௭௪௭)

முரித்தகங்கைபிடித்தகொம்பினைமொய்ம்புமிக்கசுராந்தக
னிரித்துமென்றெதிர்பாய்ந்தடுத்தனனெம்பிரான்சிரத்தெற்றினுன்
பரித்தசென்னியொராயிரஞ்சிதர்பட்ட தன்னவன் மாய்ந்தனன்
மரித்ததன்னவனோடுமுச்சகமல்கிநின்றவிடுக்கணே. (௭௪௮)

வேறு.

அழிந்ததகுவர்தம்பெருமானுவிதேசின்மயமாகி
யிழிந்தமலத்திற்றணந்திறைவனிணைத்தாண்மலரினடங்கியது
பொழிந்தகடவுளினமலர்கள்பொற்பவியங்களியம்பியஙா
வழிந்தமகிழ்ச்சியுளத்தினராய்வாழ்ந்தார்வையத்தனைவோரும். (௭௪௯)

அறங்கள்வளரமறந்தளரவமர்செய்களத்தினன்றெடுத்த
பிறங்குகளிற்றின்முகமாறிப்பெருமான்முன்போலினிதிருந்தார்
திறலகொள்காசிநகர்மன்னன்றேவர்முனிவரனைவோரு
நிறங்கொண்மலர்ச்சேவடிபணிந்துநீண்டமறையாற்பழிச்சினரால். ()

வெற்றிமுரசஞ்செறிந்தார்ப்பவீரர்பலருமெழுந்தார்ப்பக்
கொற்றமடங்கலுகைத்திருபாற்கோதைமாதரொடுமேனை
யற்றமகன்றவொன்பதின்மரான்றகுரூரன்முதல்வீரர்
பற்றின்மருங்குமிகச்சூழப்படர்ந்தார்காசிநகரிறைவர். (௭௫௧)

மன்னனெடுங்கோயிலையடுத்துமணியாதனத்திலவீற்றிருந்தா
ரின்னதறிகசுராந்தகனையிறுத்ததினிமன்றலைமுடித்து
முன்னிமுனிபாற்றமதுலகமுற்றியிறைவர்வேந்தனுக்கங்
கின்னறவிர்முததியையளித்தவிதுவுந்தொடுத்துமொழிந்திடக்கேள்.

பொன்னினிழைத்தமணிக்கோயிற்புலவர்பெருமான்வீற்றிருந்த
பின்னரரசன்பணிந்தெழுந்தெம்பெருமானமராடலைநோக்கத்
தன்னுமமரர்முதலானதொகையோர்சினதின்னருளாற்செய்
நன்னர்வதுவைக்கிருந்தேகவிற்றல்வேண்டுமெவர்க்கென்ருன். (௭௫௩)

வேந்தன்விழைவைமுடித்தருளவிமலாதுசெய்தனர்வேந்தன்
வாய்ந்தவிறைவரருள்பெற்றுமன்றன்முடங்கல்பலவேவி
யாய்ந்தவதுவைப்பொருள்வினைகளனைத்துமாக்குவீரெனாநன்
றோர்ந்தவமைசசர்தமக்கியம்பியும்பர்முதலோர்க்குபசரித்தான். (௭௫௪)

வேறு.

மங்கலமுடங்கலேற்றுமறுபுலத்தரசர்தாமு
மெங்குளசுற்றத்தாருமெனைவருமெவந்துதொக்கா
ரங்குளமுயற்சிமுற்றவமைத்தனரமைச்சரிப்பாற்
புங்கவர்போற்றுநாதர்புரோகிதராகினுரே. (௭௫௫)

புகாதுமுகுர்த்தநாடிப்பொற்பவுற்றூரமுன்னுகத்
தகவினைதொடங்கிமன்னன்றனையனுக்கொத்தமாட்சி
மகதசேயத்துமன்னன்மகளினைக்கொடுப்பப்பின்னுர்
துகளறவோமமாதிதொன்மறைவழியிற்செய்தார். (௭௫௬)

மன்றலுக்கவதிசெய்தவைகலோரைந்துஞ்செல்லப்
பின்றையைம்பண்டகையேந்திபிரமனேமுதலார்தேவர்
துன்றியமுனிவரோனைத்தொகையினரெவருக்கத்த
மொன்றியவரைப்பினெய்தவுகர்தருள்வழங்கினுரே. (௭௫௭)

துன்னியகளத்தினீசத்துவமெனுந்தோகையீன்ற
கன்னியையடுப்பக்கூவிக்கனன்றுவாய்மடுத்தவெள்ளி
தன்னையிங்குமிழ்கவென்றுசாற்றிமண்ணிடத்திற்கான்ற
பின்னரன்னதுவும்விண்ணிற்பெயர்தரவேவினாரே. (௭௫௮)

விழுமியவிடைபெற்றேகும்விண்ணவராதியோரை
யுழுவலிற்பணிந்துநின்றுளொளிறுவேற்றடக்கைமன்னன்
றொழுதெழுமந்தவேந்தன்றலங்கொளிமுகத்தைநோக்கிக்
குழுமியதேவராதியனைவருங்கூறலுற்றார். (௭௫௯)

துக்கசாகரத்தின்மூழ்கித்துணையிழந்திருந்தயாங்க
டக்கபேரின்பத்தாழச்சாமியையீண்டுத்தந்து
தொக்கதானவரையெல்லாந்தொலைத்தெங்கள்பகையுஞ்சாய்த்த
மிக்காற்குணத்துளாய்க்குவிளம்புகைமாறுமுண்டோ. (௭௬0)

வள்ளலைவழிபாடாற்றும்வாய்மையானினைக்கண்டோருந்
தள்ளரும்பயன்களுன்குஞ்சார்குவரென்றுனீவீ
ழொள்ளியபொருளின்றேனுமுன்னிடைவிழைவால்யாங்க
ணன்ளுறவழங்குகின்றநல்வரங்கொள்கவென்று. (௭௬௧)

தத்தமதாற்றற்கேற்பத்தனித்தனிவரங்களைல்கி
வித்தகவுலகிற்சென்றார்விநாயகர்வேந்தைநோக்கி
யித்தினமிறக்குமுன்னரிருமுதுகுரவர்ப்பாங்கர்ப்
பத்தியிற்படர்தல்வேண்டும்பண்ணுகவிரதமென்றார். (௭௬௨)

அம்மொழிகேட்டலோடுமான்பிரிகன்றின்மன்னன்
விம்மினனறிவுசோர்ந்துவிழுந்தனனுணர்ச்சியெய்திச்
செம்மலையழைத்தஞான்றுதெரியிழையதிதிவல்லே
தம்மெனமொழிந்ததெண்ணித்தளர்வரிதகன்றுய்ந்தானே. (௭௬௩)

சித்திபுத்திகண்முன்னுனதெரியிழைமாதாருங்
கொத்துறுமவுணர்ச்சாய்த்தகுரூரனையுள்ளிட்டோருந்
தத்தமதிரதமூர்ந்துசார்தரக்காசிவேந்த
னுத்தமனிரதம்பண்ணியூர்ந்திடுவெலவனானன். (௭௬௪)

ஆரியர்துவையாநிற்பத்தோகையர்பாடியாடச்
சீரியகவிகைபிச்சந்திரள்கொடியாலவட்டம்
யோரியல்பூதர்பற்றப்புகழ்கள்மாகதர்கள்கூற
வாரியலுருளித்திண்டேரமலருமேறினாரே (௭௬௫)

பொலிந்தவுண்ணகரநீங்கிப்புறநகர்செல்லும்போது
மெலிந்தவுள்ளத்தராகிவியநகர்மாந்தரெல்லா
மொலிந்தமெய்யன்புதள்ளவோடினர்தேரைச்சூழ்ந்து
மலிந்தகண்ணருவியாயமறுகினர்பிரிதலின்றி (௭௬௬)

தணவருநகரத்தாரைத்தம்பிரான்றேற்றிநோக்கிக்
கணபதியென்னப்பட்டகாமருநமதுமூர்த்தி
யணவுபொன்னுதிதம்மாலமைத்தகந்தோறும்வைத்துப்
புணர்பதப்பூசையாற்றிப்புலம்பிணித்தவிர்திரென்றார். (௭௬௭)

எம்பிரானருளிச்செய்தவின்னருடலையிற்றாங்கிப்
பம்புநரகரிதுரெல்லாம்படர்ந்தனர்நகரநோக்கி
நம்பியாட்டயர்க்குமாளுகண்ணியகிரூர்கடாழ்ந்து
தம்பமூற்றிரங்கிக்கண்ணீர்கவிழ்த்துநின்றிதனைச்சொன்னார். (௭௬௮)

கருணையங்கடலேயெங்கள்கண்ணுறுமணியேயென்புன்
பருவருமலங்கடீர்க்கும்பரம்பரனுதிக்கின்ற
பெருமிதப்பொருண்மைக்கேற்றபெற்றியினிருந்திடாது
மருளுமெஞ்சிறுமைக்கேற்பமண்ணிடைப்பாலனானாய். (௭௬௯)

வியங்கொள்வான்போன்றுஞ்சாலவியங்கொளப்படுவோன்போன்று
நயங்கிளர்தோழன்போன்றுநல்குவான்போன்றுநல்கும்
பயன்களையேற்பான்போன்றும்பருவரவடிப்பான்போன்று
மியவகடிபவோன்போன்றுமெங்களிலொருவனானாய். (௭௭0)

அடிசில்களுடன்கைதொட்டுமணியுடனணிந்துநாளும்
படியமர்விளையாட்டெல்லாம்பயின்றுடனிருந்துமின்று
கடிதலிற்பெருநீரற்றகயலினம்போன்றுயாங்கண்
முடிவதுசாதமற்றுன்முன்னுறுநின்னோடென்றார். (௭௭௧)

சிங்கியமகிழ்விற்கூறுஞ்சிறார்முகமினிதுநோக்கி
நுங்களைத்தணவோநுவகணுனித்தறிபுந்திதன்னிற்
றங்குவோமிடருண்டாயிற்றகநினைமின்கள்யாமே
பங்கதுதீர்த்தும்போமென்றமலனவ்வரைநீத்தார். (௭௭௨)

புறநகர்நின்றுநாதர்பூபதியிரதந்தூண்டச்
செறிபணைமருதவைப்புத்தீர்ந்தருங்கானத்தேகி
பறிவனாச்சிரமஞ்சாரவதற்குமுனறிந்தின்றோர்க
னிறைதருகாதல்பொங்கவெனரேலெனவெதிரேபோந்தார். (௭௭௩)

இருமுதுகுரவர்வந்தாரெனமகிழ்ந்திறைவர்தாமும்
பெருநிலத்திறங்கிசென்றூர்பேணியவிழைவாற்றாதை
மருவுறத்தழுவிக்கொண்டுவிடுத்தனர்மருங்குநின்ற
கருணைநற்றாயுஞ்சாலத்தழுவினள்கவலைநீத்தாள். (௭௭௪)

மனமகிழ்சிறப்புநாதர்மருங்குளார்தமக்குமேற்ப
வினைமலியுபசாரங்களியற்றினரவருமந்த
வனகர்பாலுபசாரங்களாற்றினரிருவர்தாமுங்
கனமுறழ்கொடைக்கைவேந்தன்கைதொழுதிறைஞ்சிச்சொல்வான்.

என்னையாளுடையீர்நுங்களெழிற்பெருங்கருணைநோக்கான்
மன்னுபூபாரநீங்கிமன்றலுமுடிந்ததிங்குச்
சொன்னநும்மொழியின்வண்ணந்தோன்றலைவிரைவிற்றாராத்
தன்மையென்னென்றுகேட்பிற்சாற்றுகேனதனுக்கேது. (௭௭௬)

ஈங்கிருந்தெழுந்துசெல்லுமியவையுளற்றைஞான்றே '
தாங்குபல்படைஞர்தம்மைச்சாடினர்வழிநாளாதித்
தீங்கறமூன்றுநாள்கள்சித்திபுத்திகளின்மன்றல்
பாங்குறமுடித்துச்சேர்ந்தார்பதியவரிறும்பூதெய்த. (௭௭௭)

ஐந்தெனுநாளின்மூவரவுணர்காவலரைத்தேய்த்தார்
வெந்திறற்கணிதன்றன்னைவீட்டினராறாநாளிற்
கந்தரக்கூபர்தம்மைக்கடிந்தனரேழாநாளிற்
சிந்தினரெட்டினம்பாசுரன்முதற்றெவ்வர்தம்மை. (௭௭௮)

ஒன்பதிற்கொன்றாரம்பாசுரன்றனையுயிர்த்ததாயை
யின்புறநகரினுள்ளாரிமெய்விருந்தயர்ந்தார்பத்தின்
றன்புறப்பத்தோடொன்றினரந்தகன்றொலைச்செய்தார்
பின்பிருநாளிற்றேவாந்தகனொடுபெரும்போர்செய்தார். (௭௭௯)

ஏழிருநாளிற்காலைச்சுராக்கநகற்கிறுதிசெய்தார்
வாழிமேலைநாள்கண்மன்றலைமுடித்தார்பின்னர்ச்
சூழிருபஃதென்றேழுமிற்றைநாட்டுன்னிநின்று
றூழியுமழிவுறாதவுத்தமர்நும்பாலென்றான். (எஅ0)

மன்னவன்வைகல்வைகன்மகோற்கடர்புரிந்தவாட
றன்னமுமொழியாதோதத்தழைத்தவுள்ளத்தாரூர்
துன்னியகுரவர்பின்னர்த்தூயவில்லகத்தில்யாரு
முன்னினரளவளாவிமுறைமையினிருந்தாரன்றே. (எஅக)

வழிவருநாளின்மன்னன்மகோற்கடர்முதலானோரைக்
கழிபெரும்பத்தியோடுகழலிணைபணிந்துபோற்றிச்
செழிபலவரமுங்கொண்டுசிந்தையாங்கிருத்தித்தீர்ந்து
பொழின்மருங்குடுத்தகாசிப்புரத்தினையடுத்துவாழ்ந்தான். (எஅஉ)

சிலபகல்கழிந்தபின்றைத்தேவர்கடேவனுளுங்
கலதிசெய்பொறியைவென்றகசியபாதிதியென்னு
மிலகியபுகழினுரையெதிர்முகத்தினிதுநோக்கிக்
குலவியகருணைநோக்கிற்கொழித்தெழக்கூறலுற்றார். (எஅங)

அருந்தவநெடிதுகாலமாற்றுபுநம்மைநோக்கி
வருந்தலினும்பாற்காதன்மகனெனவந்தான்மை
பொருந்தலர்ச்செகுத்துவிண்ணம்புலவருக்களித்துமண்மேற்
றிருந்தியவேதநீதிசெழித்திடச்செய்தாமன்றே. (எஅச)

இனிநமதுலகஞ்சாரவெய்துதுமென்றார்கேட்ட
முனிவனுமதிதிமாதுமுகுர்த்தமொன்றவசமெய்திப்
பனிவருங்கண்ணராகிப்பரமனேயினிமேலென்று
புனிதநின்னுருவங்காண்போமெனமிகப்புலம்பினாரே. (எஅரு)

புலம்பியகுரவர்தம்மைப்புராதனரினிதுதேற்றி
யிலம்பகமணிந்தநெற்றியிமவரைப்பிராட்டிபாங்க
ரலம்புகிண்கிணிக்கான்மைந்தனுகுதுமங்குக்காண்மி
னலம்புனையுளத்தீரென்றுகவிற்றினர்மறைந்துபோந்தார். (எஅசு)

மருங்குறைசித்திபுத்திமாதரைமுதலாவுள்ள
வருங்கிளைதம்மோடெய்தவானந்தபுவனமென்னு
நெருங்கியவளத்திற்சான்றநின்மலவுலகம்புக்குப்
பெருங்களிதழைப்பவாழ்ந்தார்பேசுவார்பிறவிநீப்பார்! (எஅஎ)

வேறு.

கதிவளர்கசியபமுனியுங்காதல்செய்
யதிதியுந்திருவுருவமைத்துச்செம்பொனான்
மதிதவழ்கோயிலொன்றாக்கிவைத்ததில்
விதியுளிபூசனைவிளைத்துவந்தனர். (எஅஅ)

வாரணவாசியின்வதிநின்றோரெலாங்
காரணனுரைத்தமைகடைப்பிடித்துயிக்
கோரணிமனைதொறுமிருத்திமூர்த்தியை
யாரணவிதிப்படியருச்சித்தாரரோ. (எஅகூ)

அன்னதுகண்டகன்புவியினேனைய
மன்னகர்மக்களுமயர்ந்தில்லந்தொறுந்
தன்னிகரில்லவனுருவந்தாபியாப்
பன்னரும்பூசனைபயிற்றுகின்றனர். (எகூ0)

காசியையடுத்தபின்காசிமன்னவன்
றேசிகன்மகனெனத்தேவதேவனார்
பூசியுண்டெடுத்தெழில்புனைந்தானம்மனை
யேசிலுட்கருணையினிருந்ததெண்ணினான். (௭௯௧)

மனமதுபொறிவழிவழங்கலின்றியே
தினமருந்தவம்புரிசிறந்தயோகரும்
கனவினுங்காணருங்கணத்தியக்கரை
நனவிடைப்பெற்றநானமுவினேனென்றான். (௭௯௨)

விண்மணியிழந்திருள்விரிந்தவையமுங்
கண்மணியிழந்திடர்கலந்தகண்களுந்
தண்மணியிழந்துளந்தளர்ந்தநாகமு
முண்மணியிழந்தவென்னொடுமொவ்வாதென்றான். (௭௯௩)

பல்வகையின்னணம்படர்ந்துகண்டவர்
கல்வகைநெஞ்சமுநகரையத்தன்னுள
மொல்வகையழன்மெழுகொத்துக்கட்புன
லில்வகையின்றிமுன்னொழுக்கவேங்கினான். (௭௯௪)

வைகலுமன்னவன்மகோற்கடர்க்குறு
நைகரமில்லதோரன்பினன்னனுபு
செய்கடன்மறந்துளந்திகைத்தசெவ்வியிற்
பொய்கழிமுற்கலமுனிவன்போந்தனன். (௭௯௫)

வத்தகைவடிவமுமிறைமகோற்கட
ருத்தமவடிவமாயுணருங்கொற்றவ
னத்தவன்றனையுமக்கணேசனேயெனப்
பத்தியினெதிர்கொடுபணிந்துபோற்றினான். (௭௯௬)

நன்றுறுமடிகளேநாதர்தாளிணை
யென்றுநான்காண்குவனியம்புகென்றன
னென்றியமுனிவரனுவந்தையாயிரந்
துன்றுறுமாண்டுகெடாலயக்காண்பையால். (௭௯௭)

அத்தனைநாளுமிங்கரசுசெய்திரு
வித்தகவிநாயகர்விமானமீற்றினி
லுத்தமநின்னுழையுறுவிப்பாரிது
சத்தியமறியெனச்சாற்றிநீங்கினான். (௭௯௮)

மாதவனீங்கலுமழையைநோக்கிய
சாதகமெனத்தரையாளுமன்னவன்
போதனதடிமலர்புந்திநாடிபு
காதலிற்பூசையுங்கண்டுவந்தனன். (௭௯௯)

அறையுமையாயிரவாண்டுநீங்கலுஞ்
சிறையினின்றகன்றவன்போன்றசித்தையி
னிறைதருமகிழ்ச்சியினிருபன்வையக
முறைசெயமைந்தனைமோலிசூட்டினான். (௮00)

வழிவருமடியவர்மதியினிற்பவ
ரெழில்படர்விமானமொன்றேவினாது
பொழில்வளர்நகரிடைப்புக்குநின்றது
விழியெதிர்கண்டனன்வேந்தர்வேந்தனே. (௮0௧)

ஆடினன்றட்டமிட்டமலன்சேவடி
பாடினன்பலமுறைப்பணிந்தெழுந்தன
னீடினன்மகிழ்ச்சியினீள்விமானமேற்
கூடினனதுதகக்கொண்டெழுந்ததே. (௮0௨)

குய்யகவுலகமுன்னுகக்கோதறு
மையர்களுலகெலாமடைவினேக்குபு
கையணிமழுவினருலகங்கண்ணுற்றி
மெய்யணியுளத்தவன்மேக்குச்சென்றனன். (௮0௩)

வேறு.

விளங்கியவண்டப்பித்திமீமிசையினிதுவைகும்
வளங்கெழுகந்தர்வைப்புமன்னியகவுரிவைப்புந்
துளங்கலில்வனப்புநோக்கித்துன்னினர்கிழக்குநோக்காக்
களங்கமில்சிவலோகத்தைக்கண்டதிற்புகுந்தானன்றே. (௮0௪)

பன்மணியிழைத்தகோயிற்பரிசனம்பாங்குசூழ
வின்மணித்தவிசின்வைகும்விநாயகர்திருமுன்னேகி
நன்மையிற்பலகாற்றாழ்ந்துநாத்தழும்பேறவாழ்த்திப்
புன்மையினீக்கியென்னைப்புரந்தருளிறைவவென்றான். (௮0௫)

துலங்கியவளர்தானுகத்துரும்பினையாக்குமாபோன்
மலங்களைத்துமித்துத்தன்னைமருவினர்தாமேயாக
விலங்கருள்புரியுநாதனிறைஞ்சியமன்னற்கென்றுங்
கலங்கலிலறிவுநல்கியுடங்கமர்காட்சியீந்தான். (௮0௬)

நித்தியநிமலானந்தநிறைவதாய்ப்பிறிதலில்லா
முத்தியைக்காசிமன்னன்முன்னவனருளாற்பெற்றுக்
கத்தன்மெய்ப்பாதப்போதேகண்டுகொண்டிருந்தானன்னு
னுத்தமத்தவத்தையாரேயிற்றெனவுரைக்கவல்லார். (௮0௭)

எனவுரைசெய்தலோடுமெதிரறுவியாசனென்பான்
வனசமென்மலரினனைமலரடிவணங்கிச்சொல்வா
னனகனுகியகணேசனுனந்தபவனமென்னுந்
தனதுலகடைந்தானென்றுசாற்றினைமுன்னரன்றே. (௮0௮)

ஈங்கிவனருளாற்காசியேந்திலேவேற்கைமன்ன
னோங்கியசிவலோகத்தினுற்றவன்பாதசேவை
நீங்கலனுனென்றுநிகழ்த்தினையதனுனெஞ்சந்
தாங்கியதையமர்தவையத்தைத்தவிர்க்கவென்றான். (௮0௯)

நன்றுநீவினுவினின்றாய்நயத்தகக்கேட்டியென்று
மன்றலங்கமலவாழ்க்கைமறையவனுரைப்பானந்த
வென்றியஞ்சிவலோகத்தின்விளங்குமீச்சுரனேவையத்
தொன்றுமுத்தொழிற்குமூவராகியேயுற்றாற்போல. (௮௧0)

விக்கினமுழுதுநீக்கிவேண்டியவரங்களல்கி
மக்கள்விண்ணவர்கள்யாரும்வழிபடுதெய்வமாகி
யெக்கடவுளர்க்குமுன்னர்ப்பூசனையேற்பாராகி
மிக்கவரின்மைதோன்றவிநாயகரெனும்பேர்தாங்கி. (௮௧௧)

இம்மையுமறுமைவீடுமெளிதினிலருளவேதே
விம்மொளியுருவங்கொண்டான்வியாசனேவிளம்புமீச
னென்னுமத்திருமேனிக்கும்விநாயகனென்னையாரும்
பன்னுமித்திருமேனிக்கும்பார்த்திடிற்சற்றேவேறு. (௮௧௨)

திருவுருவிரண்டன்மாட்டுஞ்சிவனியவந்துவென்றே
வுருவவையிரண்டிஞ்சாலவொத்தமையுரைப்பக்கேளா
யருள்பொழிவதனமைந்துமையிருகரமுமூவைக்
திருளறவிழியுந்திங்களிலங்குவார்சடையும்பாம்பும். (அகங)

ஆக்குதலளித்தல்போக்கலனமுத்தொழிலுங்காளுந்
தாக்கமர்புரியவல்லசாரதப்படையுமொய்த்து
மாக்குலமுரலுங்கொன்றைவன்னிபாசறுகுமற்றுந்
தேக்கொளிவேணிச்சென்னிச்சிறப்புறவணியுஞ்சீரும். (அகச)

ஒத்தனகண்டாயந்தவுருவிரண்டினுக்குமன்ற
வத்துவொன்றுதலாலேமருவிவாழுலகுமொன்றே
யத்தகுமுலகந்தானேயானந்தபவனமென்றும்
பத்தியினுணர்ந்தோரெல்லாம்பசர்சிவலோகமென்றும். (அகரு)

வளர்சிவலோகமென்றும்வழங்கியததனுன்முத்தி
வளமருள்கணேசர்வைகும்வைப்புமவ்வுலகேயாகுந்
தளர்வறவவர்பாலன்புதழைத்தமெய்யடியார்தாமு
முளமகிழ்சிறப்பவெய்துமுலகமுமதுவேயாமால் (அகசு)

ஆதலான்மலைவேயில்லையறிமகோற்கடர்தஞ்செய்கை
யோதினமவரேமீளவுமையிடைத்தோன்றினன்மை
மேதகவருளுமுண்டிவிநாயகராணவாறுங்
காதலிற்கேட்டியென்றகட்டுரைத்திடென்வேதன். (அகஎ)

மகோற்கடர்திருவவதாரப்படலம்முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-உகசுச.



## அக - வது உடுண்டிவிநாயகர் திருவவதாரப்படலம்.



காரணியுமலர்ச்சோலைக்கைவர்த்ததேயத்தி
லோரணிபன்மகமென்னுமிரும்பதியின்வாழ்க்கையுளான்
பேரணியினுஞ்சிறந்தபிரமசுரனெனுமசுரன்
றூரணிசெஞ்சடைப்பெருமான்றுள்கருதித்தவமுயன்றான். (க)

கலைவளைத்தசெஞ்சடையிற்கதிர்நகைக்கங்கையைக்காந்த
மலைவளைத்தசிலைக்கரத்தார்வந்தெதிர்நின்றனராகக்
கொலைவளைத்தமனத்தவுணன்கொம்மெனவங்கெழுந்திருந்து
தலைவளைத்தமறைமொழிந்துசயசயவென்றேத்தெடுத்தான். (உ)

வேட்டவரம்யாதென்றவிமலனுர்வாய்மலர்ந்தார்
கேட்டவுணன்மீட்டிறைஞ்சிக்கேழ்த்தவென்கையெவர்முடியிற்
றீட்டினுமன்னவர்வெந்துசெழும்பொடியாகுகவென்றான்
நாட்டநுதற்கரத்தவர்தாநகைத்தவனுக்கதுகொடுத்தார். (ங)

அப்பொழுதேசோதிப்பமலர்திருமுடிமீதே
துப்புடையபிரமசுரன்றொடுக்கரம்வைப்பானடுத்தா
னொப்பரியவரங்கொடுத்தவொருதாமேயழித்துவிடல்
செப்பமலவெனவிறைவர்செறிந்தவியாபகாரனார். (ச)

கட்புலனுக்கெதிர்நின்றகன்றுதவர்மறைதலொடு
விட்புலம்பாதலமவனிவேலைவரைதிசையெங்குங்
கொட்புறவுற்றுன்றுருவிக்கோகனகமலர்மாது
நட்புறத்தன்மலர்த்துணவாரணனன்னதையறிந்தான். (ரு)

தளரிலைமைந்தவென்றுதன்னணியமனைழக்கோட்செல்வன்
களமலிமிடற்றுநாதர்கருணைசெய்யெழுத்தோராஞ்சம்
விளருக்நிக்கையார்த்திவிளம்பினன்பண்பிற்கேட்டுத்
துளவிளைவிதர்த்தவண்மைத்துராசதன்றவத்திற்புக்கான். (கஎ)

ஆயிரவருடமொற்றையடிப்பெருவிரலினுச்சி
பாயினிலத்திலூன்றிப்பட்டினியுற்றுவெய்யோன்
காயழல்வெப்பங்கூதிர்கடும்பனிவிளைக்குஞ்சீத
மாயினவிடும்பைக்கஞ்சாதறைக்தனனெழுத்தோரைந்தும். (கஅ)

புற்றெழுந்துடலமூடப்புதலொடுமொரங்கணீடிச்
செற்றுறவரிதுநோன்பிற்றிகழ்துராசதனைக்காப்பப்
பற்றியவிமயமாதுபாகராய்விடைமேற்கொண்டங்
கேற்றவர்க்கற்றநாதரவனெதிர்தோன்றினாரே (க௯)

நாரணனறியாத்தேவர்நயந்தருள்கடைக்கணோக்காற்
சார்தரப்புற்றைச்சிதைத்துத்தவத்துறைகருத்தினானை
யாரணமறியார்வந்தாரறியெனத்தெளிப்பவன்னான்
பாரகமுறையிற்றாழ்ந்துபரசினன்மறைகள்கொண்டு. (உ0)

கைமலருச்சியேறக்கண்ணிணையருவிதூங்க
மெய்மயிர்பொடிப்பவேத்தும்விழுமியமொழிதள்ளாட
மைமனக்கரையநின்றநாமவேற்றகுவற்பாரா
ரெய்மலிகுலத்தண்ணனீவரங்கேண்மோவென்றார். (உக)

அரக்கனீண்முடிகள்பத்துமலறநன்றடர்த்தபாத
ரிரக்கமோடருளிச்செய்தவின்மொழிகேட்டுமீட்டும்
பரக்குமெய்யன்பிற்றாழ்ந்துபலவரமிரக்கலுற்றான்
சுரர்க்கிருங்களையேயானதுராசதனெனுநாமத்தான். (உஉ)

நித்தியப்பொருளாயுள்ளநின்மலாநீயேயாகச்
சத்தியேயாகநும்மாற்றரப்படுத்தனையராகப்
பைத்தபாப்பணையானைப்பங்கயனுகவெவ்வே
றொத்தபல்லமரராகவுரகர்தானகர்களாக. (உங)

நரகர்களாகமாக்களாககாற்காலியாதி
விரவுபல்லுயிர்களாகவெண்பத்துநான்குநூறு
யிரமெனும்பவங்களின்றியீண்டுலகத்திற்றோற்ற
மரவணிசடையாய்வேறுண்டாயினுமவையேயாக. (உச)

பன்முறைநீவிரெல்லாம்பரிவுதீர்ந்தென்னைக்கொல்ல
வன்மையின்முயன்றீரேனுமற்றுநான்மடியாவாறுஞ்
சொன்மலிதேவாயாருந்தொழுதெனதேவல்கேட்ப
நன்மைவையகங்கண்மூன்றுநானரசாளுமாறும். (உரு)

மல்கியவெறுக்கையீட்டுமெம்மரினழுந்துறுமே
யல்கியபத்திராயேற்கடிகள்பாலிருக்குமாறு
நல்குகவரங்களாகநாதனேயென்றான்மாது
புல்கியபாகத்தெங்கள்புண்ணியரருளிச்செய்வார். (உசு)

பொத்துதேசொளியதாகிப்போக்கொடுவரவில்லாநஞ்
சத்தியேகவுரிபாங்கர்விநாயகரென்னச்சார்ந்து
வைத்துநின்சிரத்திற்றானையடக்குதல்வாய்மையேனைக்
கொத்துறுவரங்களெல்லாங்கொடுத்தனந்தோடியென்றார். (உஎ)

சராசலங்கசத்தமரியனாதியோர்கவலைகூடத்
துராசதன்வரங்கள்பெற்றுத்தொழுதெழுதனஞ்செம்மாந்தான்
பராபரன்மறைந்துபோற்றும்பத்தர்களுளத்தில்வாழ்ந்தான்
பரரவியமுகுந்தையென்னும்பதியிற்றனவனுஞ்சார்ந்தான். (௨௮)

தொகுவரம்பெற்றவேந்தாய்த்துராசதன்வந்தானென்று
தகுவர்கள்வந்துதாழ்ந்தார்தமைத்தமராகக்கொண்டு
நகுகதிர்ப்படைகையேந்துநால்வகைச்சேனைசூழப்
புகுமிடமின்றிமுற்றிப்பொருதனனரசரோடு. (௨௯)

சிலர்பெருமானங்கொண்டுசெருப்பலபுரிந்துமாய்ந்தார்
சிலரமர்க்களத்திற்றோற்றுத்திசைதொறுமிரிந்துபோனார்
சிலரடிவணங்கிப்போற்றித்திறையளப்பவர்களானார்
சிலரவனேவலாற்றிச்சேவகஞ்செய்தார்மன்னர். (௩௦)

அவனிமன்னவரையிவ்வாறடக்கியபின்னர்ச்செந்தேன்
றுவலைசெய்கற்பகாட்டிற்றுராசதன்றனைத்துசென்றான்
அவன்வரவறிந்துமுன்னேயாயிரங்கண்ணனீங்கித்
தவமலிகாசிமூதூர்சார்ந்தனன்சுற்றத்தோடு. (௩௧)

ஆங்கிருந்தரசுசெய்யென்றவுணனொருவன்றன்னைப்
பாங்குறவிருத்திமேலாம்பங்கயனுலகஞ்சார்ந்தா
னீங்கியன்னவனுங்காசிநிமலனைச்சரணஞ்சார்ந்தான்
றுங்கவற்கவரைவேறோர்தகுவனைத்தகுவன்வைத்தான். (௩௨)

திருமறுமார்பன்வைப்பிற்சென்றனன்சிறந்தமாலும்
வருவதையோர்ந்துமுன்னேவாரணவாசிசார்ந்தான்
நிருபனுந்தகுவனங்குநிசாசரனொருவன்றன்னை
யிருவெனவிவ்வாறெல்லாவுலகமுங்கைக்கொண்டானே. (௩௩)

ஆணையிற்பிழையாவண்ணமடிப்படுத்துலகமூன்றுந்
தானையொடதிலகுந்திண்டோட்டுராசதனினிதுமீண்டு
கோனைவன்னெச்சிசூழ்ந்தகுலவுதன்பதியில்வாழ்ந்தா
னானையுற்றமரரெல்லாநகைமுகஞ்சாம்பினாரே. (௩௪)

ஒருதினம்போதத்தாணியொளிர்மணித்தவிசினேறி
மருவுழித்தகுவர்கோமான்வையகமூன்றுநந்த
மொருகுடைநிழற்றச்செய்தாமுறுவதென்னினிமேலென்று
னருகுறவிருந்துகேட்டவமைச்சர்களிதனைச்சொன்னார். (௩௫)

தேவர்கண்முனிவர்சித்தர்திசைமுகன்றிருமான்மாலா
மேவலம்பிடித்தசூலத்திறையவரெவரும்வைகு
மேவருகாசிதன்னைவென்றபினன்றேயெங்குங்
காவலகவிகைநிழல்கதுவியதெனலாமென்றான். (௩௬)

அதுவமைச்சர்களின்வாய்க்கேட்டவுணர்கோன்முழுவதேற்றி
யிதுமிக்கரிதுகொல்லோவெழுகநம்படைகளென்றான்
கதுமெனச்சேனைநான்குங்கடலெனவெழுந்தகாசி
முதுநகரடுத்தான்வைகுமுகுந்தையைநீங்கித்தீயோன். (௩௭)

வேறு.

களங்கமேபுரியவுணர்கோன்காவலனடைப்பத்
துளங்கினானவராதியோர்தொழுதடிசார்ந்தார்
விளங்குகாசியான்விச்சுவநாதர்தாமவனுக்
குளங்கொள்காதலிற்கொடுத்தருளுயர்வரநினைந்தார். (௩௮)

இன்னும்வர்திலதிவன்றனையடக்குவானென்று
தன்னிகின்றவர்தமக்கெலாஞ்சோர்வறச்சொல்லி
யன்னவைப்பினையகன்றகேதாரத்தையடுத்தார்
முன்னியவ்வுழிவைகினர்முருக்தனுதியரும். (௩௯)

தூயவாரணவாசியிற்றுராசதன்புகுந்து
மாயமாய்ச்சுரராதியோர்மறைந்தனரென்ன
வாயவோகையினப்பதியிருந்தாசியற்றிப்
பாயமூவகையுலகமும்பரித்தனனெடுகோள். (௪0)

காலமெண்ணிலதுராசதன்காவல்செய்திருப்பச்
சீலவிண்ணவர்திகழவிப்பாகமுஞ்சிறந்த
கோலமங்கையர்போகமுங்கூடலின்மையினுற்
சாலநொந்தனர்பிரமனைத்தாழ்ந்துசெப்புவரால். (௪௧)

இனையதானவனென்றுகொலழிகுவனிந்த
வினைவலான்றனையாவரேவீட்டுவரிவற்கு
நினைவிலுடருநெடுவரங்கொடுத்தவர்யாரே
துனையவோதுகவென்றலுமயன்றெருகுத்துரைப்பான். (௪௨)

உருத்திரன்றிருமாலயனெனுப்பமுக்குணமா
யிருத்தலின்றியக்குணங்களையென்றுமாண்டருளுங்
கருத்தனுகையாற்குணேசனக்குணவிகாரத்திற்
பொருததமின்மையினுகையாற்புகல்குணாகிதன். (௪௩)

ளங்கவக்குணங்கடந்திருத்தலிற்குணாதீதன்
வளங்கொளததகுமுலகெலாமருவிநிற்றலினுல்
விளங்குவிசுவவியாபியவ்விசுவத்தையாண்டு
துளங்குறுநலந்தோற்றலின்விச்சுவகருத்தன். (௪௪)

வெய்யனுயுலகழித்தலின்விசுவசங்காரி
பையமெல்லெனப்படுவனபலவற்றின்மேலா
மையனுதலிற்பராபரனுமெனப்பட்ட
செய்யனுகியசிவபிரானொருவனுண்டமரீர். (௪௫)

அன்னவீச்சுரன்றேசுருவாகியசத்தி
கன்னிபார்ப்பதிகாமருமலர்வதனத்தி
லென்னையாளுடைவிநாயகரெனவருங்கால
மின்னலேபுரிதானவனிறுதியாங்காலம். (௪௬)

அறுதியில்வரமவுணனுக்களித்தவரகில
நிறவும்விச்சுவநாதரேயினிநிலைக்கலக்கி
யிறுதிசெய்பவனியம்பியவிநாயகனேயா
முறுதிகொண்டுமைமாதினைப்பழிச்சமினென்றான் (௪௭)

வேறு.

கமலனுரைத்தமொழிகேட்டுக்கவலைக்கடலின்கரையேறி
யமரரெவரும்பராபரையையகிலமுயிர்த்தகாரணியை
விமலரிடத்திற்பிரியாதவிலங்கன்மகளைமலப்பகையைச்
சமரம்புரிந்துதனித்தின்பந்தருபூரணியைப்பரசுவார். (௪௮)

ஒருத்தியாகியுலகனைத்துமோம்புமருளேயுல்கத்தின்
வருத்தமகற்றப்பலவுருவாய்வயங்காநின்றசத்தியே
ருத்தையகன்றவுருவாளேகடவுண்முனிவர்முதலோர்செய்
பருத்தவழிபாட்டினுக்கிரங்கும்போரானந்தப்பெண்ணமுதே. (௪௯)

குணமேசொரூபமானவனேகுணத்தையாளுங்கோமனமே
குணகாரணமேகுணநீதக்கொம்பேவேதந்துதிப்பவனே
தணவாதவனிதரிப்பவனேதருதாபரசங்கமந்தமக்கு
நிணுரதாரமானவனேநீடுந்தேவசொரூபியே. (௫௰)

அடியார்பீழையறுத்தவர்கட்கிலப்பொருளுங்கொடுப்பவனே
கொடியார்சுகத்தைக்குமைத்தவர்க்குங்கோதில்கருணைசுரப்பவனே
மிடியால்வருந்துமெமைப்புரப்பவேண்டும்வேண்டுமென்றிரந்தார்
முடியாமுதல்விதுதிக்கிரங்கிமுழுத்தவருளினெதிர்நின்றான். (௫௧)

மணங்கொப்புளிக்குங்கருங்குழலுமதிமென்முகமுமருள்விழியுங்
கணங்கொன்குழைசேர்வடிகாதுங்கதிர்ப்பூண்முலையுந்தொடிக்கரமு
நுணங்குமிடையுமுருவனைத்துநூலைக்கடந்தவியல்பினவு
ரிணங்கும்வடிவினணங்குருவாயெதிர்நின்றவளைவணங்கினர். (௫௨)

விழைந்தவரம்யாததுதன்னைவிளம்புவீரென்றுமையம்மை
தழைந்தகருணையால்வினவத்தமியேம்பிழைத்தேமெனவிபுதர்
குழைந்தவுளத்தராயவுணன்கொடுமையுரைத்துநிமலையினி
யிழைந்தவெமதுதுயரகற்றியெல்லாவளமுந்தருகென்றார். (௫௩)

நெடுமையுலகிற்பலநாளுநிகழ்த்தாநின்றதுராசதன்றன்
கொடுமையறையக்கேட்டலொடுங்கொதித்துவெகுண்டாளுமையம்மை
யடுமைவிழிச்செந்தீமுன்னரவளானனத்திலேகனெனப்
படுமெண்குணத்தான்றேசுருவாய்ப்பயிலுஞ்சத்திதோன்றியதே. (௫௪)

காலையிரவிகோடியெனக்கதிர்க்குந்திருமேனியினொளியு
மாலைமதிச்செஞ்சடைமுடியும்வடவைநிகர்த்தவுருத்திரமும்
வேலையெனமெய்யடியார்க்குவிரிக்குமருளும்விளங்கியமுந்
நூலையணிந்தமணிமார்புநோன்மைசான்றகரம்பத்தும். (௫௫)

செங்கைத்தலங்கடோறும்படையுந்திவளும்வதனமோரைந்தும்
பொங்குவிரைசேர்கத்தூரித்திலகம்பொறித்தநுதற்பொலிவும்
தங்குமாகமாலிகையுந்தயங்குமணிமாலையும்விளங்க
வங்கணெழுந்தவிநாயகரையம்மைநோக்கிமகிழ்கூர்ந்தாள். (௫௬)

இடும்பைநெறும்வக்கிரதுண்டரென்னுநாமமிகத்தரித்து
நெடும்பைதிரமும்வியப்பெய்தநீடும்பூசைபுரிந்தேத்தி
யடும்பையரவத்தாருரத்தார்க்கரியூர்தியுமீந்தவுணர்களாற்
கடும்பையிழந்துசுகமிழந்தகடவுளாரைப்புரவென்றாள். (௫௭)

வேறு.

சக்கரமேந்துநெடியவன்முதலாந்தமனியவுலகவரெவருந்
தொக்கனர்வணங்கித்தொழுதெழுந்தாடித்துலங்கியவிநாயகர்தம்மை
விக்கினராசபத்தருக்குரியவித்தகமறைதிகள்கடந்தோய்
பொக்கமிலாதபுண்ணியமுதல்வபூரணசயசயவென்றார் (௫௮)

வேறு.

எம்பெருமான்றிருவடிகண்டேத்துதலினடியேமே
பம்புபெரும்பேறுடையேம்பம்புபெரும்பேறுடையே
நம்புபெருந்தூய்மையினேநம்புபெருந்தூய்மையினேம்
வெம்புமிடர்களுந்தீர்ந்தேம்விண்ணுமும்பெற்றேமென்றார். (௫௯)

தேவர்குறிப்பையுமுணர்ந்துசிலம்புயிர்த்தவுமையம்மை
பூவடிவந்தனைபுரிந்துபுழைக்கைமுகத்தெம்பெருமான்
றூவரியவலிமடங்கற்றனியூர்திமேற்கொண்டு
காவலர்கள்புகழ்காசிநகரடைந்தார்பூதரொடு. (௬௰)

உலகிலுறங்கியுலகிறந்தவொருவான்பொருளில்விழித்தந்த
வலகில்பரமானந்தமயமானவமுதப்பெருங்கடலிற்
கலவிமுழுகித்திளைப்பார்கள்கருணைநிறைந்தவுளத்தினராய்
நிலவுமுலகமொருமூன்றமொடிதுபரிபாலனஞ்செய்வார். (கஅ)

பிழைதீர்தாங்கள்பெறும்பேறபிறருக்குபதேசித்திடுவோர்
விழையார்விழையப்படும்பொருளைவெறுர்கள்வெறுக்கப்படும்பொருளைத்
தழைகாமியமூன்றையுமில்லார்தநுவினடுக்கும்பிராரத்தம்
பழையோன்மணியம்புதுமணியம்பாற்றியாங்குத்தாநுகரார். (க௯)

வேறு

சகலமுஞ்சொருபமாகையாற்சகலபூதமுஞ்சொருபமேயாக
விகலறக்காண்பார்சீவன்முத்தர்களாயிருப்பர்களுலகிலுள்ளவர்க்குப்
புகலனுக்கிரகப்பொருட்டுலகத்திற்புரையறச்சரிப்பர்காமாதி
திகழுயிர்திரியம்வென்றவரோடுஞ்செம்பொனுமொப்பவேகாண்பார். (உ0)

தக்கயோகத்தால்வசீகரமாயதன்னிடத்தமர்சொருபத்தை
மிக்கபாவனைகள்கடந்தபாவனையால்வேறறக்கண்டுகொண்டிருக்கும்
பொக்கமிலுளத்தையுடையரொன்றானும்புரைபடார்வேறுதான்படார்கள்
பக்குறபடையாலடிபடாரிழுக்கப்படார்பரிசுத்தமிக்குடையார். (உக)

உள்ளவூழ்வினைகளொழிதருங்காறமுழிதருமுடலிடைவந்து
நள்ளிருவினையின்பயன்களைத்தமக்குநல்லனதீயனபுரிவோர்
கொள்ளவேதாங்கள்பிரமமொன்றனையேகுறிப்பறக்குறித்திருப்பார்க
டெள்ளியவிவரையித்தகுயோகச்செய்தியரேயறிவாரே. (உஉ)

அறிவித்தாலறியுமாருயிர்க்காதியாகியவாணவமருளாற்
பிறிவித்தானந்தம்பெருக்கியொன்றாமிப்பிரமமாகியவிநாயகனே
நிறுவித்தாரணியீறணநாதாதிநிலைபெறுதத்துவமற்றாற்
செறிவித்தாருயிர்க்குத்தநுகரணாதிசெயிரிலைந்தொழில்புரிகின்றான். (உங)

கரிசிலைந்தொழில்செய்காரணர்தமக்குங்காரணமாயையிற்பலவாய்
விரிதருமுலகில்வியாபியாய்நின்றும்விகாரமாதிகடனக்கில்லான்
றெரிசதாசிவனேதிகழ்பராசத்திசிந்தூரமுகவன்மால்கதிரோன்
றரியவைவர்களாய்ப்பூசைகொள்கின்றானுயிர்க்கெலாநாயகனவனே. (உச)

பேறிகழ்வின்பம்பிணிவளர்மூப்புப்பேதுறச்சாதலென்றரைக்கு
மாறினுமோவாதுயிர்களையெல்லாமமைவுறச்செலுத்தியுந்தனக்குக்
கூறியவிருப்புவெறுப்பினையில்லான்கூடியெவ்வுயிரையுமயக்கும்
வீறியமாயைமயக்கமுமில்லான்விளங்கியவநாதியேயமலன் .(உ௫)

படைகளாற்பிளக்கப்படானழலழற்றப்படான்சலநனைத்திடப்படானக்
கண்டவளியுணக்கப்படான்வெளிபோலவகிலமுமிறப்பினுமிறவான்
றடையறவொன்றுவின்னதென்றறியாத்தத்துவன்றகுபிரமாண
வடைவினுலறியாவப்பிரமேயன்விளங்குமெய்ஞ்ஞானியர்க்கறிவோன். (உ௬)

இத்தகுபெருமானிணையடிநிழலினிரண்டறக்கலந்துநானறலே
யுத்தமயோகமென்றமுன்னுரைத்தயோகமேயோகமவ்வியோகச்
சித்தயோகியரேயோகியரவர்கடெளிந்தவேதாந்தமேமுதலா
மெத்துசாத்திரத்தினிரதமேநுகர்வார்விளங்கியகேட்டலாதிகளால், (உஎ)

பிறங்குமெய்ஞ்ஞானயோகியராமிப்பெற்றியரென்றமெவ்விடத்து
முறங்கியமகன்கைப்பொருளெனத்தத்தமுறுவருணத்துயர்நிலையி
னறங்கிளர்தன்மர்தாங்களேயொழியினல்லதையகற்றுதல்செய்யார்
மறங்கிளர்மலங்கள்பிறர்க்கறச்செய்வார்வறிதும்யாதொன்றெனப்புரியார்.()

இதுதெரியாதமூடர்கண்முனியேயிறப்பொடுபிறப்பினைவிளைத்து
மூதுயர்ப்படுக்குவகைண்மமேவிழைந்துமுறமுறப்புரிந்துயிண்ணுதிக்
கதவுபுன்போகஞ்சத்தியமெனறுகளித்தினிதார்ந்துணாவழிந்து
பதியெனும்பிரமத்தியல்பறியாதுபவந்தொறுமபன்முறைசுழலவரா. (உகூ)

ஆதலிற்பிரமத்தியல்பினையறியவாதரித்தவர்கடத்தமது
மேதகுமொழுக்கம்புரிந்திறைவனுக்குவியத்தககொடுத்திடினாதுதா
ஞேதருஞ்சித்தசுத்தியைசசெயதேயுயாந்தஞானத்தினுக்குரிய
வேதுவைத்தோற்றப்பிறப்பிறபபினைப்பினனெனயதுறுரவாகண்மாதவனே ()

அநதநீகருமமாற்றுகமுனியேயணறவருணைசிரமத்தி
னந்தபிமான ஈதனையொருகாலுநணுதலினறிவையகதோர
மந்தமாகியபுல்லறிவினைவிடுதுவழிந ந்துயநிடுமெபொருட்டே
யிநதயோகததையெயதவலலாதாரியறறிடுமெயோகமுமிசைபபாம. (௩௧)

வேறு

அட்டமூர்த்தமாயடஙகியவகிலத்துமொன்று
யொட்டிநின்றருளபிரமதததையுளளவாறுணாந்து
முட்டில்வையகததுறுதொழினமொழிபிரமததிற
பட்டமெய்தொழிலெனவதைப்பாரததலுமயோகம. (௩௨)

இந்தயோகததையுடையவனின்னலிறசுகததில்
வந்தவோகையிலவெகுளியின்வறுமையினவாழ்வி
னைந்துவான்பொருளிழவினினலிபிணியடையி
னந்தமேவருமபோகததினடைவினிலிறப்பில (௩௩)

சாரிலாபததிலலாபததிறசயததபசயததிற
சேருமானததிலமானததிறறெருளினினமருளிற
கூருமயோகததினவியோகததிறகோதினிறகுணத்தி
லாருமின்னனபோல்வனவனையவறறுளளுமை . (௩௪)

பல்குபுத்திரர்சததுருமித்துருபநது
புல்சுகுர்த்திருமபசுமனேமுதறபொருளிடத்தும
பில்குசெஙகதிரசசூரியனசநதிரனபெருநீ
மல்குசெஙகனலசிவஞசநதிமாயவனபிரமன. (௩௫)

இந்திரன்முதறறேவர்களியக்காகநதிருவா
சிந்துமாநதிதீர்ததஙகேததிரஞசெறிமனுட
ரிந்தநல்விடததினுஞசமபுததிவைதசெனறு
மந்தவத்துவைககாண்குவரகததினுமபுறததும (௩௬)

வருணமாசிரமததினைவழுவறப்புரிந்து
கருணைநாயகனுகியகணேசர்பாலந்தப்
பொருணிலாவுகன்மங்களைப்புகனறினிதளிததே
மருணிலாவுமஞ்ஞானததின்வந்துறுரவரே (௩௭)

பாவபுண்ணியப்பயததினைப்பரமனுக்களிதத
தேவனற்புதஙகருதியசெல்வரேபொறியின்
மேவலற்றறுபநதமாகியவினைநீஙகித
தாவிலின்பமாகியதனிப்பாததினைசசாரவரா (உஅ)

உள்ளமைம்பொறிவழிவிடயித்திடையுறுஙகாத்
தென்னுமின்றநற்றெய்வவாககியமெனுஞானத
தெள்ளலின்றிநின்றிடவயிராககியமீண்டு
நன்னவன்னதுபிரமததிற்றிரபுததிநன்றும் (ருக)

[illegible]வினைத்தனக்குதவேயிட்டி
[illegible]ப்பொருள்களினைசைய
[illegible]மருவிசத்தின்விரவிபொன்றுசப்
பட்டதாமியபுத்திபெதிரபுத்திபார்க்கில் (௪0)

அனைபதாகவின்வீட்டினையாதரித்தவர்கள்
வினையெலாந்தரும்விடயத்தின்மேவியபொறியை
யினைவுருவகைமீட்டிரும்பிரமமெஞ்ஞான்று
நினைதல்வேண்டுமெயததவத்திடைநின்றமாமுனியே. (௪௧)

மீட்டிடாததன் மனத்தினைவிழைபொறிவழியே
யீட்டமாகியவிடயததினெய்துறவிடுப்பி
னோட்டமாயதிலமுத்திநொடியங்கழுந்திற்
கோட்டமேபுரிகாமமாய்குரோதமுமாமே. (௪௨)

அதுவுண்டாகவஞ்ஞானமுண்டாமதனாலே
பதியதாகியபிரமததிற்படர்நினைவிறக்கு
மிதுவுண்டாகவேபிரமமெய்ஞ்ஞானமின்றாகி
வதியஞ்ஞானியாய்முன்புபோறபிறப்பிடைவருவான். (௪௩)

அன்னதாகையான்மனம்பொறிவழிவிடாதடக்க
வென்னையாளுடைக்கணேசனாரிருபததென்றுந்
தன்னதார்வமெலாந்தரிப்பிததலேவேண்டு
மின்னதாம்வழிபாட்டினாலிருஞ்சுகமாமே. (௪௪)

நதியெலாங்கடலடைவதுபோலநாடோறும்
பதியின்மாட்டுறுங்காமங்களனைததையும்பாய்த்து
மதியதேதிரபுததியாவெனைதெனுமயக்க
விதியிலாதமெய்ஞ்ஞானியேவீட்டினையடைவான். (௪௫)

பொருவின்மாதவனேயிதுவேபுணர்பிரம
சொருபமாகியபுத்தியசசொருபமாய்நின்றோன்
கருமம்யாதுமில்லாமலேயிருப்பன்மன்கரும
மருவிநின்றிடுஞ்சுதந்திரன்பிரமத்தைமருவான். (௪௬)

மருவுமிந்தியவகுப்பினான்மாதவமுனியே
கருமயோகததைக்கரிசறச்செய்ததன்பயனை
யொருவுமார்வத்தையுடையவனேபரன்கமலத
திருவமெல்லிலைநீரினொட்டான்வினையவனே. (௪௭)

அறிவதாய்நமதறிவுருப்பிரமத்தையவாவி
நெறியினாற்பலகருமமுநிகழ்பலன்குறியா
துறுதியாற்செயல்கருமயோகங்களிவ்வியோகம்
பிறிவில்சாங்கியயோகத்தைக்காட்டுபெயரும். (௪௮)

வேறு.

தழைதருவேதாயோகஞ்சாங்கியயோகமென்ன
விழைவனவிரண்டினுள்ளும்விளங்கியவேதாவென்னும்
பிழையறுகருமயோகம்பிறங்குசாங்கியயோகத்துக்
குழைவளரேதுவற்றாற்சாங்கியயோகமேலாம். (௪௯)

சாங்கியயோகந்தன்னாற்றனைமறந்திறக்குங்காறு
நீங்குறான்கருமயோகநெறியினையுணர்ந்தோன்கன்மம்
வீங்கியபயனைநாடிவிளைப்பவன்றிருடனத்தத்
தூங்கலேகொடியபாவிதொன்மைதேராதரோல். (௫0)

மல்கியவுயிர்கட்கெல்லாமகிழ்ச்சிவானவராலாய
தல்கியதேவர்க்கின்பமாயதெச்சங்கடம்மா
லொல்கியவெச்சம்வேதத்தாதித்தனவுயர்ந்தவேத
நல்கிடப்பட்டதென்றாசித்திடாப்பிரமந்தானே. (ருக)

ஆகையாலனையதாகியகம்புறமாஞ்சொரூபத்
தேகமாய்விரவித்தயக்குமின்பமேயின்பமாகும்
போகமானவைகளெல்லாம்புல்லுறுத்துன்பமாகு
மோகையான்மகார்களாடலுயர்ந்தவர்க்கிழிந்தவாபோல். (ருஉ)

வேறு.

உலகர்யோகத்தையொழிந்தியானெனதெனுஞ்செருக்கும்
விலகிமேதகுபிரமத்தின்விரவியொன்றாகிக்
குலவுமானந்தக்கடலிடைக்குளித்தவர்தம்மை
யலகுகாண்பரிதாங்கடலயிரலகிடினும். (ருங)

மடமையாற்றனைப்பிரமமென்றெண்ணியமதியோ
னுடன்விராவியபிரமத்தினுண்மையையுணரான்
கடவுளாம்பிரமத்தினுட்டனதியல்கண்டோ
னடலையாகியவெனதுயானென்பதாகவிற்றான். (ருச)

கன்மயோகமும்வியோகமுங்கரைந்தனமவற்று
ளன்மையாவதுவியோகமோகவிற்றியயோகம்
வன்மையாகியபந்தமேவளர்ப்பதுவியோகந்
தன்மையானவிஞ்ஞானமேதருவதுமுனியே. (ருரு)

மதியின்யாதனின்யாதனின்வழுவினோனதனி
னதனினோதலையடைதரானருஞ்சுகமுறுவான்
மதியின்யாதனின்யாதனின்மருவினனவனி
னதினினோதலைமருவுவானடைகுவன்றன்பம். (ருசு)

சுருதிகன்மகடொகுத்திடு'மிருதிகன்மங்க
ளொருவுறுச்சமதங்களாலுஞற்றியப்பயனை
மருவுறாதகல்வியோகத்தின்வளரும்விஞ்ஞானங்
குருவின்சீரருளால்வருங்கோதறுமுனியே. (ருஎ)

குருவினன்மலத்துமித்தவிஞ்ஞானங்கூடாது
கருமம்யாவையும்பயன்றகக்கருதியேபுரிவார்
பொருவிலாதவிண்ணவர்களாய்ப்போகங்களுகர்ந்து
மருவுபூமியின்மறுவலும்வருவர்நற்சார்பின். (ருஅ)

கன்மநன்றுசெய்ததன்பயன்கருதலதொழிந்து
கன்மநிட்டையையுடையராய்க்கரிசெலாமறக்குந்
தன்மைநல்கியதவநிட்டையுடையராய்த்தவறு
நன்மைமல்கியஞானநிட்டையைநணுகுவரால். (ருகூ)

ஞானநிட்டையையுடையவர்ஞானமேவடிவ
மானமெய்ப்பெரும்பிரமமேயாவர்பின்பிறவார்
வானமுட்டியதவத்தினோய்வழங்கும்யோகத்தை
யீனம்விட்டுயர்பிரமமாயிரந்தனைகேண்மோ. (சு0)

அறியுநீரதொன்றேயதுபிரமமேயதனை
யறியுஞானமேஞானமாமருந்தவமுனியே
செறிசராசரமாகியதிரளெலாமதுவே
யறிதராவுயிர்ப்பேதமும்பேசியவதுவே. (சுக)

மண்ணிற்கந்தமுகீரினிற்சுவையுமவைகழுவி
னண்ணுருபமும்வளியினிற்பரிசமுநவைநீர்
விண்ணற்சத்தமும்வேறுமவ்வற்றினீங்காத
வுண்மையாங்குணமனைத்துமப்பிரமமேயுரவோய். (௩௨)

இனையதாகியபிரமத்தையிறந்துயிர்போங்கா
னினையின்வேறுறுநிலையதுவாகவேநிற்பார்
வினையின்மீட்டுறார்விண்மைவேதனையாதி
தனைவராவிஞேர்தாகளுமீளுவர்சாதம். (௩௩)

தெய்வம்யாதனைச்சேர்ந்தெவர்போற்றினுமந்தத்
தெய்வமாயிருந்தவர்க்கருள்வரங்களைச்செறிக்குந்
தெய்வந்தேர்வரும்பிரமமாகியவிநாயகனே
தெய்வம்யாவையும்வழிபடுந்தேவனுமவனே. (௩௪)

வேறு.

காலம்பிரமபாவனையேகருதல்கரிசிலுபாசனையென்
றுலுமிவற்றிஞேக்கருமமாக்கல்வேண்டுமறிவுடையோர்
காலமிரண்டக்கினிசசோதிமயமாக்கதிரோன்கதியொன்று
சாலவமிழ்தசசோதிமயந்தாஞந்திங்கட்கதியொன்று. (௩௫)

வெண்மைகருமைபக்கமெனவிளங்குமிவற்றுளடங்கியிடும்
வண்மைவளர்க்கும்பலகாலவகுப்புமபிரமபாவனைதான்
றிண்மையுலகிலவேறின்றிசசெறிந்தொன்றனைபிரமத்தி
னுண்மையுணர்தலகருதல்சதசத்தையுள்ளபடிமதித்தல். (௩௬)

இருவேறுகுமுபாசனைதானெழிலார்புறப்பூசனைசாலக்
கருதாகிரகுமகப்பூசையெனவேகரைந்தபுறப்பூசை
மருவார்மலர்மஞ்சனந்தூபமணிதீபாதிதிரவியங்கொண்
டொருகாந்னறயனபிலனுடுமொருகோட்டிறையையருசசித்தல். (௩௭)

துகடறகப்பூசனைபூதசுத்திபிராணகருடணஞ்செய்
திகலார்புதநியாபாரமிறுதநதந்ரபத்தியிற்குருவின்
முகஞல்வருமந்திரககணிததமுதல்வனுருவந்தியானித்து
மிகமாமறையின்றோத்திரங்கள்விளம்பிவணங்கிவழிபடலாம். (௩௮)

புறப்பூசனையத்திறப்பூசைபொருவிலகப்பூசனைதிரமாஞ்
சிறப்பார்முனியேயாதலினுற்சிறந்ததாகுமகட்பூசை
மறப்பேர்னைப்பேயிவையொழிந்துவாழவேண்டிற்காலமுத
லுறப்பூதலத்திறகருமங்களுஞற்றும்பயனைக்கருதாதே. (௩௯)

எசசமழலோடதிமனுநெய்யீண்டுமெவுசுதியாகமுடற்
றுசசிலறந்தோததிரநீதிதொடங்கும்பத்தியுபாசனைக
ணசசுஞ்சகலதிரவியங்கணவில்காரணகைளசதசத்து
வெச்சனமாணமிரதமிலைவயெல்லாம்விநாயகனே. (௪௦)

அந்தவிறைவன்திருவுருவிலாற்றுஞ்சரப்பூசனையாக
வெந்தவடிவுளகத்திருதநியயற்றலசரபூசனையாச்
சிந்தைவிழைவிற்புரிகின்றோன்றிகழ்சண்டாளவிழிகுலத்தில்
வந்துபிறப்புள்ளவனேனுமறையோர்குலத்திலுதித்தவனும். (௪௧)

பிறப்பிலுயர்ந்தபிராமணனுப்பெரிதுமறைகள்பயின்றுணர்ந்து
சிறப்பவிருந்தாலுமிடிதூசமதவதேவன்திருவடியி
லிறப்பவழிபாடியறுநானிழிசண்டாளகுலத்தோரு
ளறப்புத்திலையில்லாவிழிருனைவனுயினிதுமெய்யே. (௪௨)

வேறு.

சேத்திரக்கேத்திரக்கிஞ்ஞனென்றிவற்றையாய்ந்தசெம்மையனேவிநாயகனுக்குரியனுவன், சேத்திரமாவதுபூதமைந்துதன்மாத்திரையைந்துகன்மவிந்திரியமைந்து, வாய்த்திடுஞானேந்திரியமைந்தாங்காரமனம்புத்திசேதனமென்றிவையெண்மூன்று, மேத்தியசேத்திரக்கிஞன்றானிவற்றையாய்ந்தவியல்பினனுமென்றறிகமுனிவரேறே. (எங)

தத்துவகாரணமானபிரகிருதிமாயைதான்மூன்றுமலைவுதகுலீபாசரிராட்சசியே, முத்திறமாகியவிவைதாஞ்சகலவுயிர்மாட்டுமயங்குவனவிற்றினுடைபலஞ்சின்னமிண்டும். பத்திபுரிவியாதமுனியேநினக்குத்தொகுத்துப்பகருதுங்கேடைவியெனப்பகர்குணந்தான்பரமா, முத்தியிதுக்கேதுவெனவிருக்குமொழிந்தவைதாமூடம்வளர்பந்தத்துக்கேதுவாயிருக்கும். (எச)

பலனுரைத்தாமினித்தைவிசின்னமுரைத்திடக்கேள்பரன்மனையைவிழையாமைகோளுரையாடாமை, குலவுமுயிர்கொல்லாமைவெகுளாமைநன்றிகொல்லாமைகருணையுடனிருத்தனெறியொழுக, விலகுமுடற்காந்தியபையம்பொறுமைசீலமினியமொழிகொடைதவந்தானங்களுறவாய்மை, மலர்தலைவயகம்பெறினுநடுவுநிலைபிழையாமனவன்மையெவர்களுக்கும்வணக்கமுறன்முதலாம். (எரு)

ஆசுரியின்சின்னங்களரவமிகவார்த்தையறைதல்பிடித்ததுதீயதாயினுஞ்சாதித்து. மாசுபடுமபிமானமஞ்ஞானங்கெறுவம்வளர்கோபமாதிகளாமிராட்சசிக்குச்சின்ன, நேசமொடுமனஞ்சென்றவழிச்சேறன்மோகநெட்டுமகங்காரத்தினைமதித்துத்தருக்க, நேசிகனந்தரதேவர்வேதசாத்திரங்கடெளிந்தபெரியோர்சிந்தையெவர்க்கும்பகையாதல். (எசு)

தன்குருவைவிடுத்தேனையோரைவழிபடுதல்சாதுக்கள்வாக்கியத்திலவிசுவாசமின்மை, நன்குகருமாசாரமின்மைபாசண்டர்நவிற்றுநவைவாக்கியத்தின்விசுவாசமுண்மை, நன்மரியற்றுமைவழிபடற்குரியபெரியோர்கழல்கள்வணங்காமையுயிர்க்கொலைபாவிசாரம், வண்மையொடும்புரிகத்தனுகுதலாதிகளாமாதவனேயினித்தவங்கண்மூன்றுக்கும்வகுக்கின். (எஎ)

அன்னவைதாங்காயிகமேவாசிகமானதமேயாமென்பாவற்றினுட்காயிகத்தவர்தானித்த, மன்னியிடுஞ்சுதன்மபரிபாலனஞ்செய்திடுதல்வாசிகமாந்தவம்பிரியவசனமேயுரைத்து, நன்மைதரும்வேதசாத்திரதத்தைவிரையாதநவையறப்பாராயணஞ்செய்திடுவதுமானதந்தான், றுன்னியவந்தக்கரணச்சுத்தியதாய்ப்புலனிற்றுன்னுமற்பொறியைந்துமடக்குவதாமுனியே. (எஅ)

அவைமூன்றுர்தைவிமுதன்மூன்றுமூன்றுமவற்றுட்சாத்துவிகமாந்தவர்கன்ம, நவையில்பயன்கருதாதசெய்வதிராசதமாய்நண்ணுவதம்புகழொன்றேநாடியிருகைகன்மர், தவறறவேபிறரறியப்பிரகாசமாகத்தான்புரிதல்தாமதமாந்தவம்பிறரைவருத்திக், கவலைபுறத்திடுந்தவமாமாதலினுற்பின்னர்க்கரைந்தவிரண்டினுஞ்சனனமாணக்கதுவுறுமே. (எகூ)

இளர்தானமூன்றுங்கேடின்மறைவிதிவாக்கியப்பிரமாணங்களினற்பாத்திரத்திற்றேசம், வளர்காலமறிந்தசிரத்தையிற்பிறர்க்குத்தோன்றுமரபினிரும்பொருள்கொடுத்தெவ்வளவுகொடுத்தோமென், றுளமெங்கிழக்குறையுறுதல்சாத்துவிகத்தானமுபகாரம்புரிந்தவர்கட்குபகாரம்புரிதல், தளராதவரும்பயனைக்குறித்தொருவர்க்களித்தல்தகவருத்தத்தொடும்புரிதலிராசதமாந்தானம். (அ0)

காலமொடுதேசங்களின்றியபாத்திரத்திற்காமர்பொருள்பிறரறியக்கொடுத்தளித்தேனென்று, சாலவெடுத்தெடுத்துரைத்துதன்னைமேம்படுத்தருமதமாந்தானமினிஞானமூன்றுஞ், சீலமுனியேயழிதன்மாலையவாய்ச்

மறைமுதலனைத்தும்மால்வகுத்திடவென்றுநாளு
நிறையுமின்றுண்மையான நிரம்பியகருணை தன்றாற்
குறைவறவுணர்த்தாயேன்குடங்கையாமலகமெனக்
கறையறமுழுதுந்தேர்ந்தேன் காதரமுழுதுந்தீர்ந்தேன். (௯௧)

இனியொருகுறையுமில்லேனுயிருறு மெம்பிரானே
முனிவருட்சீர்த்தியாய்க்கமுகனைமைசோவீணையங்கைப்
புனிதன்முன்னொருநாளென்பாற்பொற்புறவந்தளானின்
றனிவறும்விசுவரூபஞ்சொற்றனன்சிறிது கேட்டேன். (௯௨)

அதுதனைக்கண்ணாற்காணவடியனேற்கினிதுகாட்டா
யிதுபொழுதருளாயாயினெளியனேனுய்யேனென்று
கதுமெனமீட்டுந்தாழ்ந்தான்கணேசனார்கருணைகூர்ந்து
மதுமழைபொழிந்தாலென்னவாய்மலர்ந்தருளிச்செய்வார். (௯௩)

கற்பனைகடந்தநந்தங்காமருவிசுவரூப
மற்புதமாகுமந்தவற்புதந்தன்னைச்சகதி
விற்பொலியூனக்கண்ணால்விண்டுவேகாணொணாது
சிற்பரஞானக்கண்ணாற்றெளிந்தவர்காணினலலால். (௯௪)

ஞானவாள்விழியைநின்பாலல்குதுங்காண்டியென்று
ஞானவாள்விழியைச்சாலநல்கினர்ஈசை தீர்ந்த
ஞானவாள்விழியைக்கொண்டேசாரணனினிதுபார்த்தான்
ஞானநாயகனார்கொண்டநயத்தகுவிசுவரூபம். (௯௫)

முடித்தலையெங்குஞ்சீர்த்தமுகமலரெங்குமின்ன
விடித்தருள்விழிகளெங்குமிருஞ்செவியெங்குமாய்த்தம்
பிடித்தகைத்தலங்களெங்குமிறங்கிபதயானங்களெங்கு
மடித்தலமெங்குமேனையவயவமனைத்துமெங்கும் (௯௬)

கொண்டநாருருவிற்சாலக்குழூஉயவயவந்தோறும்
மண்டமுமண்டந்தோறுமமரர்களாதியாக
விண்டிடுஞ்சருக்கமெய்ம்விதங்களுநிறைந்தகாணாக்
கண்டுபேரின்பவெள்ளக்கடலிடைப்படிந்தானமாதன். (௯௭)

விம்மிதம்விளையாநிற்கும்விழூஉவருஞ்சாலச
செம்மலாரருளப்பெற்றேன்சிறியனேனந்தோவென்று
கைம்மலர்முடியிலேறக்கட்புனலிழியவுள்ளங்
கொம்மெனவுருகிநைந்துகுழையநின்றினைசொன்றான். (௯௮)

கனைத்துவண்டுளருங்கொன்றைக்கண்ணியநினதுவாக்கா
லனைத்துநம்முருவமென்றேயறைந்தனையதற்கேற்சான்று
வெனைத்துநின்னுருவமானவியற்கையெனவிழியிற்காட்டி
வினைத்தொடக்கறுத்தாய்நாயேனென்னெனவிளம்புகேனே. (௯௯

அத்தனேயிந்தக்காட்சிபறிந்தவருளரோவென்று
நத்தினன்வினவநின்றானதனாருளிச்செய்வார்
பத்தியையுடையராகிப்பயின்றமெய்யோகஞ்சான்ற
வுத்தமச்சனகாதியுறுதவரநேகர்மாயோய். (௬00

நம்முடைஞானக்கண்ணானமதருளுருவங்கண்டு
மும்மலமிரியல்போகமுத்தராயின்பம்பெற்று
ரம்மையோருகத்தினம்மையுருமகவாகப்பெற்ற
மம்மர்தீர்தவத்தானல்லவரேணியனென்னுமன்னன். (௬0௧)

நமதருட்கீதைகேட்டநமதருக்காட்டக்கண்டு
விமலத்தையடைந்தானந்தவெள்ளத் திட்டுளைந்தவாழ்ந்தான்
சமதமழுடையார்க்கிந்தச்சாத்திரஞ்சாற்றுமென்ன
வமலனாருளிச்செய்தாராழியான்றெளியமாதோ. (க0உ)

அத்தகுகணேசர்கீதையாழியானுணர்ந்துநன்மை
மெத்தவியம்மனன்பாலவிழைவொடுகொடுத்தானந்த
வுத்தமன் மனுவுக்கீந்தானுயனிகடமுனிவர்பல்லோர்.
பத்தியிற்கேட்டுப்பாரம்பரையிறெல்விளக்கினரே. (க0ங)

இயம்பிகணேசகீதையிழுதையார்கேட்டாராயின்
பயந்தருபாவமுற்றும்பாற்றியான்கதியைச்சார்வர்
நயந்தருசன்மார்க்கத்தார்நன்றுறக்கேட்டாராயிற்
சயம்புவாகியகணேசர்தாளிணைநீழல்சார்வார். (க0ச)

வேறு.

தூயராகியவிநாயகர்சொருபமற்றவர்பான்
மாயன்கேட்டவாறுரைத்தனமாதவவறிமோ
தீயயாவையுஞ்செகுத்தருடேக்கவதார
மாயபன்னிரண்டையுமுறைமையேயறைந்தனமால். (க0ரு)

வேறு.

இனிவருங்கலியின்வருணமேநிலையேயியற்றினுக்கொத்ததன்மங்க
ளனைவரும்பிழைத்தப்பிறன்மனைவிழைதலாதிபாதகமெலாம்புரிந்து
தனிவசெய்பிணிகள்வறுமைகளாதிதன்பமேயிடைவிடாதுழப்பர்
புனிதநான்மறைகணீதிகண்முழுதும்பொன்றுமப்பொழுதவான்றேவர். (

முற்றநஞ்சுவாகாசுதாவட்காரமுதலியகன்மமின்மையினாற்
றுற்றிடருழந்தகணேசனார்பாததணைமலரகத்தறவிருத்திப்
பற்றறவிழையாவுபாசகராகிப்பவன்பெறத்தோத்திரம்புரியார்
மற்றவர்க்கிரங்கித்துப்பிரயவண்ணரெனமகோற்கடர்வருகுவரால். (க0எ)

இருகரமலருமொருகையினேந்தமிலங்குவாட்படையுங்கொய்யுளைய
கருநிறப்பரியுமுடையராயக்கணேசர்பல்படைக்கலத்தோடு
பொருதிறற்சேனைநான்கையும்படைத்தப்புவனத்தினுறமிலேச்சர்களை
யொருவருமொழியாவகையிறுத்தடர்ந்தவறுகணுழுழுவதமிறப்பார். (க0அ)

தூப்பிரவண்ணரின்னணம்போந்ததரிசினர்தமைத்தெறுங்காலந்
தேம்புறுகலியினந்தமேயாகுஞ்செயிரறுமுனிவனேயப்பா
லோம்புறுதருமசொருபமாய்கிரேதாயுகமுறுங்கணேசரிவ்வாறு
தாம்பயில்விளையாட்டளவிலமுழுதஞ்சாற்றநம்மாயுளுமமையா. (க0கூ)

ஆதலினுரைத்தமான்மியநகொண்டேயமைதியிப்புராணத்தவொருசார்
மேதகுகணேசர்மூவர்கடமையும்வியத்தசப்படைத்தன வென்றுஞ்
தீதறவொருசாருருத்திரர் முகத்திற்றிகழ்ந்தனவென்றுமப்பாமன்
காதலினொருசார்பணிந்தனவென்றுங்கணேசர்தாம்பணிந்தனவென்றும்.

ஒருழியுமையாளயிற்றினிற்கணேசருதித்தனவென்றுமற்றொருசார்
சிறுமடன்முகத்தினிற்பிறப்புத்திகழ்ந்தனவென்றும்வெற்பிறைவி
யேருறவொருசார்பணிந்தனவென்றுமேரம்பரிறைவியையொருசார்
சாருறமுனத்தாற்பணிந்தனவென்றுசைவையறவிற்றிடப்பட்ட. (ககக)

இன்னணநாளுவிகற்பமலைவாயியம்பிடப்பட்டனவேறு
மன்னவையெல்லாம்யுகங்கள்வேற்றுமையாலாட்டர்கள்வலியின்வேற்றுமையாற்
றுன்னியவடியார்பாகவேற்றுமையாற்றோற்றலின்விபரீதமாகயனே
மன்னியகணேசர்தமதியன்முதன்மைமாட்சியிற்றிறம்புதலின்றே. (ககஉ)

இத்தகுகணேசர்மெய்ச்சரிதத்தினியல்பறியாதவரெல்லாஞ்
சத்தியமேயோவசத்தியமேயோசாற்றியவிவையெனமலைப்பா
ருத்தமசனத்தோருள்ளனவேயென்றுணர்குவருண்மையெண்ணுதார்
மெத்தியநாலேழ்கோடிவெந்நரகுவீழ்குவர்பன்முறைமுனியே. (௧௧௩)

அவரவர்கணேசர்தமையுபாசித்தவடைவுமற்றவரவதரித்துத்
தவவிளையாடலுமுறையேசாற்றினந்தவமுனிவரனே
யுவமையிலந்தக்கணேசரைநீயுபாசனைசெய்யெனவுரைத்தான்
பவமெனுங்கடலைக்கடந்தருட்கரையேபற்றியபங்கயச்செல்வன். (௧௧௪)

திருமலர்வாழ்க்கைச்செல்வனைநோக்கிச்செயிரறுமாதவவியாசன்
கருணைசெய்கணேசர்மான்மியஞ்சாலக்கரைந்தனையாய்க்கென்னகைம்மாறிவ்
விருநிலத்தடியேன்செய்திடவல்லனெனத்துதித்தெதிருறவணங்கி
யருள்விடைபெற்றுமந்திரமெண்ணியருந்தவம்புரிதரப்போந்தான். (௧௧௫)

உபதேசப்படலம் முற்றியது.

ஆகத் திருவிருத்தம் - ௩௧௪.



## ௮௪ - வது வியாசர்வரம்பெறுபடலம்.

கந்தமூலங்கனிதுவன்றிக்கமழ்மென்புனலுநறுநிழலு
மெந்தவிடத்துநனிதழுவியிடர்கள்சிறிதுமெய்தாமே
சிந்தைகவருமொருவனத்தைச்சேர்ந்தவியாசமாமுனிவ
னந்திலிருந்தேகாக்கரத்தையநுட்டிப்பொடுமெண்ணுபுநோற்றான். (௧)

செய்யகிரணக்கதிர்கோடிசெறிந்தாலனையதேசுருவுஞ்
செய்யவடியுஞ்செவ்வணியுஞ்செய்யதொடையுஞ்செஞ்சாந்தம்
பெய்யுங்கரடமதயானைப்பிரங்குமுகமுமுடையவரா
மையர்முனிவனெதிர்நின்றாராண்டோராறுகழிந்தபின். (௨)

கண்டான்பயந்தேகாக்கரத்தைக்கருத்தினழுந்திவிழிமூடிக்
கொண்டானதனையறிந்திறைவர்கோனின்முனியேயஞ்சலைநீ
தண்டாதுளத்திலெவன்றன்னைச்சார்ந்தனைந்தாயவன்யானே
யொண்டாரணியில்விழைந்தவரமுரையாய்தருதுமெனநவின்றான். (௩)

வல்லையெழுந்துமுனிவணங்கிவலம்வந்திருகைசிரங்குவித்துச்
செல்லலகலவியாசமுனிதேவதேவனுருநோக்கிச்
சொல்லுமொழிதடுமாறத்துணைக்கணுரைப்பமயிர்பொடிப்ப
நல்லதவத்துளகமுருகநயந்துபாடியிதுசொன்னான். (௪)

காரணகாரணமானகடவுளேசிதானந்தக்கண்ணேமன்ற
வாரணமாதிகளறியாவகண்டபரிபூரணமேயடியேற்கின்று
தாரணிநின்பதகமலச்சேவைகொடுத்தருளுதலாற்றமியேனிந்தத்
தாரணியிற்றூய்மையினேன்றூய்மையினதமியேன்செய்தவமுமாதோ. (௫)

இந்தநெடும்புவியிற்றவணமிங்கேயிருந்தசராசரங்களெல்லாம்
பந்தமறுபரிசுத்தமெய்தினமற்றினியடியேன்பரிவுதீரப்
புந்திமயக்கினைநீக்கிநினதபதாம்புயத்தன்புபுணர்த்திஞானந்
தந்தொருநீபிரசன்னமாய்த்தமியேனுளப்போதிற்றங்கல்வேண்டும். (௬)

புராணமவைபதினெட்டும்புகலுமொருவல்லமையான்புணர்தல்வேண்டும்
விராவியநின்றோத்திரத்தினெவ்வாறுபேரன்புமேவுமவ்வா
றராவணிந்தசடைமுடியாயடியேற்குச்சத்திமிகவளித்தல்வேண்டும்
பராவியவென்வினையகற்றிமெய்ஞ்ஞானம்பாலித்தல்வேண்டுமென்றான். (௭)

கேட்டருளிவிநாயகனார்கருணையினாலுரைத்தருள்வார்கிளர்ந்தபத்தி
யீட்டமுறுவியாசமுனியிரந்தவரமுழுதுமுனக்கினிதுண்டாகு
நாட்டியநின்பெயர்க்கேற்பப்பரிசுத்தவுத்தமனாய்நனிமேம்பட்டு
வாட்டமுழுதொழித்தெவர்க்குங்குருவாகிமெய்ஞ்ஞானமல்குவாயால் (அ)

மூவாறுபுராணத்துக்கதிகாரியானதுபோன்முனிவரேறே
தாவாதபெருமைவளருபபுராணஞ்சாற்றுஞ்சத்திதன்னி
லேவாதுசிற்பைமுனமகங்காரத்தானம்மையுற்றேத்தாது
நீவாதபுராணமவைசொலப்புகுந்தாயதனானின்னினைவுதோற்றாய். (கூ)

வாக்குமிழுந்தாய்பின்புமலரவனம்மான்மியத்தைவகுத்துக்கூறித்
தேக்கவுதகேட்டெம்மையநுட்டித்தாயாதலினாற்செறிந்தபாவம்
போக்கினைமற்றினிநினதுபுந்தியினுமிருந்தனைத்தும்புகலுவாயென்
றூக்கமொடுமுரைத்தருளியவனுளத்தின்வீற்றிருந்தாருலகநாதர். (க0)

மிக்கபெருந்தேசினனாய்வியாசமுனியுலகமெலாம்வியக்கப்பட்டுத்
தக்கவனத்திடையங்கணுலையமொன்றியற்றியதிற்றம்பிரானை
மூக்கணனையைங்கரனைப்பதிட்டைபுரிந்திருமறையின்முறையிற்பூசை
பொக்கமறச்செய்துரைத்தான்புராணமவைமூவாறும்புலவர்போற்ற. (கக)

வியாசர்வரம்பெறுபடலமுற்றும்

ஆக திருவிருத்தம் - ருககடு.

## அரு - வது சோமகாந்தன்முத்தியடைந்தபடலம்.

மலரவன்பாற்கேட்டுகந்தவிநாயகனாமான்மியமும்வியாசனென்பான்
குலவுமருட்குரியவனாம்வைசமபாயனன்றனக்குக்கூறினான்பி
னிலவுரைப்பினதுமுறையேவிளங்கியதப்புராணத்தைநினக்குச்சொன்
னிலகியமெய்பயன்புடையசோமகாந்தாவினிநீயநுட்டிப்பாயால். (க)

என்றுதவப்பிருகுமுனியுரைத்தருளவெழிற்சோமகாந்தனந்த
வொன்றியவாசசிரமத்தினிருந்துபாராயணமுமுவந்துசெய்து
துன்றியசீர்ப்பிருகுமுனிதுணையடிப்பூசையும்புரிந்துதொழுதவந்தா
னன்றறுமத்திறல்வேந்தற்கிவ்வாறேமொருவருடநழுவிற்றன்றே. (உ)

வேறு.

மன்னவன்சோமகாந்தன்வழிபடற்கிரங்கிப்பின்பு
பன்னகமகட்டினார்த்தபராபரன்விமானமுய்த்தா
னன்னதுசோதிவெள்ளமாசைகளெட்டும்போர்ப்பத்
துன்னியகணங்களோடுதுனைந்துமண்ணிழிந்ததன்றே. (ங)

வந்திழிவிமானந்தன்னைமாதவப்பிருகுநோக்கி
யெந்திறற்சோமகாந்தன்வியத்தகவுரைத்தான்மன்னு
சுந்தரவிமானமீந்தஞ்சுமுகனார்கருணைகூர்ந்து
தந்தனரிதனிலேறிச்சாரவருலகிலன்றே. (ச)

விற்பொலிதடக்கைவேந்தன்விழுந்தவன்றிருமுன்சொல்வா
னிற்குணன்விசுவயோனிநிகழ்குணாதீதனாயிற்
பிற்படுகடையேன்பாங்கர்ப்பெருக்கியகருணைக்கம்மா
வற்பனேன்செய்யுங்கைமாறகிலத்திலொன்றுமின்றே. (ரு)

அடிகளின்கருணைதன்னாலமலனாருளும்பெற்றே
செடிகொளேனும்முன்னேதீர்ந்தேன்றேவநின்வயத்தேனன்றிப்
படிமிசையெண்ணம்வேறுபற்றிலேனுரைத்தவண்ணங்
கடிதாரியல்வேனென்றுகழலிணைவணங்கிப்போற்றி. (௬)

உழுவலன்புடையனாகியுரோமமெய்பொடிப்பக்கண்ணி
னொழுகுநீரருவிபாயவுள்ளகங்கரையநின்ற
முழுவலிவேந்தைநோக்கிமொய்யொளிவிமானங்கொண்டு
வழுவறமண்ணின்மீதுவருங்கணநாதர்சொல்வார். (௭)

வேந்தனேபுராணங்கேட்டமேன்மையாறசித்திபுத்தி
காந்தனார்கருணைகூர்ந்துகரிசில்யோகியர்களெல்லாம்
வாய்ந்தபேரனுட்டிப்பானுமருவருந்தமதுலோகஞ்
சார்ந்துவாழ்ந்திருப்பநின்னைத்தம்மினென்றெம்மைவிட்டார். (௮)

பாக்கியமுடையாருள்ளும்பாக்கியமுடையைநீயே
யோக்கியமுடையாயிந்தவொளிமணிவிமானமீது
நீக்கமிலமைச்சரோடுநேரிழைமனைவியோடிங்
தேக்கியவுவகையுள்ளங்கேளிப்பவேறுகென்றார். (௯)

மீட்டுமாதவனைத்தாழ்ந்துவிழுத்தவன்பணிகள்செய்யும்
வாட்டமின்மாணாக்கர்க்கும்வந்தனைபுரிந்துபோற்றிச்
சேட்டொளிவிமானந்தாழ்ந்துதேவனார்கணத்தைத்தாழ்ந்து
நீட்டியபுகழான்மானஞ்சேர்ந்தனன்மூவரோடும் (௧௰)

மழுப்படைகையிலேந்திவருங்கணநாதரோடும்
விழுப்பயனரசனோடும்விமானம்விண்ணெழுந்ததாகச்
செழுப்பயன்படைத்ததேவர்புரமெதிர்தெரியக்கண்டு
முழுப்பயன்படைப்பாள்கொண்கன்முன்னின்றுசுதன்மைசொல்வாள்.

மன்னனேயேமகண்டன்வரவுபார்த்திருக்குமன்றே
யன்னவன்றனைக்காணுமலகன்றநாஞ்செல்வோமாறு
வின்னலுற்றழிவன்மெய்யேயெய்திநாங்காட்சிநல்கிப்
பின்னர்வான்கதியிற்செல்லும்பெற்றியேதக்கதென்றாள். (௧௨)

பார்த்திபற்குரைத்தவார்த்தைபாங்குள்கணங்கள்கேட்டு
மூர்த்தியைக்கணேசன்றன்னைமுறையுளியேமகண்டன்
சீர்த்தமெய்யன்பிற்பூசைசெய்பயனணிமைத்தாக
வேர்த்ததம்மனத்திற்றூயேயிரங்கிமற்றிதனைச்சொல்லும். (௧௩)

நுங்கருத்ததுவேயானுனெறின்மணிவிமானந்தன்னைத்
தங்குநும்பதியின்பாங்கர்ச்சார்த்துதுமேமகண்டற்
கங்குளமகிழ்ச்சிசெய்மினம்மையப்பனுமானீர்கள்
பங்கமில்கதியிற்பின்புபடர்குதுமென்றுகூறி. (௧௪)

பொழிகதிர்விமானந்தேவபுரத்தினுத்தரத்தினுய்த்துக்
கழிபெருமகிழ்ச்சிபூத்துக்காவலனுடங்குவைகும்
பழிதபுமமைச்சர்தம்மைப்பதியிடைவிடுப்பவன்னோ
ரிழிவருமேமகண்டனிருந்துழியெய்தினாரே. (௧௫)

வணங்கினர்வணங்கினாரைமன்னவகுமாரன்கையாற்
குணங்கொடுதொழுதுபாங்கர்க்குழுகிநின்றிருப்பச்செய்துள்
ளிணங்கியகவலையோடென்னிருமுதுகுரவரெங்கே
யுணங்கினரோவுய்ந்தாரோவுரைமின்களமைச்சரென்றான். (௧௬)

கவலையிற்றுளையேல்வையங்காவல்செய்யிறைவாவாசக்
குவலயம்வென்றவாட்கட்கோற்றொடியம்மையோடு
சவலையிலாதநெஞ்சத்தாராபதிதந்தைசெந்தேன்
றுவலைசெய்கானினுய்ந்துசுரரெனவிளங்கினாரே. (௧௭)

உய்ந்தவா றுரைப்பக்கேளாயோங்குமிந்நகரநீங்கி
னைந்துகானகத்திற்சென் றுநாள்பலகழிக்கும்வேலை
யைந்துவான்பொறியும்வென் றவருந்தலப்பிருகுதன்னால்
வெந்தநோய்முழுதுநீங்கிவிநாயகபுராணங்கேட்டார். (௧௮)

அத்தகுபுராணக்கேள்விக்கைங்கரனிரங்கியுய்த்த
வித்தகவிமானமேறிவிண்ணெழும்போதுமன்னி
யுத்தமநின்னைக்காணவூர்ப்புறந்தடுத்தாராங்கே
வைத்தவென்மன்னுபோதும்வருகெனவழைத்துச்சென்றார் (௧௯)

வந்தமந்திரிகளோடும்வைகுமந்திரிகளோடுஞ்
சுந்தரவேமகண்டன்றனைந்தனனேகலோடு
நந்தியகவலைநீங்கிநல்லநாதரிகர்தாமுங்
கந்தகெளிநல்யானைக்கணமெனவுடன்சென்றாரே. (௨0)

அண்மையினடுத்தமைந்தன்றன்னையவ்விமானம்வைகு
மொண்மையிற்கணங்களேக்கியுழைவளர்சோமகாந்தன்
றண்மதிமுகமுநோக்கித்தனையனும்வந்தானன்றற்
கெண்மையணுகிச்சாலவிதஞ்சொலிவருகவென்றே. (௨௧)

சாற்றியகணங்களோடுந்தனிமகிழ்கொண்டுமன்னன்
கோற்றொடிமனைவியோடுங்குவலயத்திறங்கிச்சார்ந்தான்
மாற்றருமதுகைமைந்தன்மலரடிவணங்கிநின்றான்
போற்றியமகனைவேந்தன்புயங்களிற்றழுவிச்சொல்வான். (௨௨)

பிருகுமாதவனால்வெய்யபெரும்பிணிநீங்கியிந்தத்
திருவெலாம்பெற்றேன்மைந்தாதெரிசனநினக்குநல்க
மருவியவிழைவாலீங்குவந்துளேனினியேரம்பர்
நிருமலவுலகஞ்சேர்வேனீயரசாள்கவென்றான். (௨௩)

தந்தையாருரைப்பக்கேட்டுத்தளர்ந்தவுள்ளத்தனாகி
மைந்தனுமுரைப்பானுங்கள்வரவுபார்த்திருந்தேன்யான்செய்
முந்தனுங்கணேசர்பூசைமுழுப்பயப்பேற்றாலெந்தாய்
சிந்திநோய்தெய்வயாக்கைதிகழ்ந்துநீவருதல்பெற்றேன். (௨௪)

இனியரைக்கணமுநாயேனெந்தையைப்பிரிந்துவாழேன்
கனிவுடனென்னையுநீசெல்கதியினிற்கொண்டுசெல்க
புனிதனேயென்றுநைந்துபுகன்றனனகருள்ளாரு
நனிதுயருழந்துவேந்தனற்பதம்பணிந்துசொல்வார். (௨௫)

யாங்களுங்கணேசர்வைப்புக்கெய்துறுமுலகவாழ்வி
னேருகும்வல்விடும்பையன்றியென்சுகமிருந்ததெந்தா
யாமுடன்கொண்டுசெல்லாதகற்றினையாயினுய்யேம்
வீங்கியவுலகவாழ்வின்விழைவெமக்கில்லையென்றார். (௨௬)

மைந்தனுநகருள்ளாரும்வகுத்தசொற்கேட்டுமாழ்கி
வெந்திறற்சோமகாந்தன்விநாயகருலகினும்மைத்
தந்திடச்சுவசனல்லேன்றவப்பயன்முற்றுங்காலை
யந்தமெய்க்கதிதானுந்தனருளினாலடைவமென்றான். (௨௭)

இருவர்சிந்தனையுநோக்கியெழிற்கணநாதர்சொல்வார்
பொருதிறல்வேலோயைங்கைப்பூரணன்பூசையாற்றிப்
பருவநின்மைந்தனுற்றுப்பண்பினிற்சிறந்தானற்று
லுருவளர்விமானமேறற்குரியவனையமில்லை. (௨௮)

விழைதருநகருள்ளார்க்குவிநாயகபுராணமுற்றுந்
தழைதரவுரைக்குங்காலந்தானிலையாதலாலே
பிழைதபமுழுதுங்கேட்டபெரும்பயனளிப்பதாகிக்
குழைவினையகற்றியின்பங்கொடுப்பதோர்வாய்மையுண்டால், (௨௯)

அன்னதுயாதோவென்னிலரசனேயுரைப்பக்கேளாய்
மன்னவிமுத்தத்தேழாவரணத்துங்கணேசமூர்த்தந்
தன்னியவன்றேயந்தத்தொகைபடுமைம்பத்தாறும்
பன்னுதுங்கேட்கவிந்தப்பதியெனவவற்றைச்சொல்வார். (௩௦)

வேறு.

முந்தியவாவரணத்துடுண்டிவிநாயகரேமொழிதுற்கைவிநாயகரேயற்கவிநாயகரே, நந்துமருட்பிரசன்னவிநாயகரேயென்றுநவையறுக்கும்வீமவிநாயகர்பிறவிதுமிக்குஞ், சந்திரவிநாயகரென்றறுவருளரிரண்டிற்றகுசித்தருபவிநாயகரிலம்போதரரே, யந்தமில்சீர்கூபதந்தர்சலாடர்குலப்பிரீடரருள்சதுர்த்தர்பஞ்சமரேமுண்டவிநாயகரே. (௩௧)

இகவில்சமுசிகர்விடங்கர்நிசவிநாயகரேயிராசபுத்திரவிநாயகர்பிரணவரே, பகருமுபதாபரெனும்பதினல்வர்மூன்றிற்பதமருள்வக்கிரதுண்டர்பரவேகதந்தர், திகழுந்திரிமுகர்பஞ்சமுகரெயோம்பர்செயிர்தபுவிக்கினராசர்வரதவிநாயகர்வென், மகிழ்செயுமோதகப்பிரியரெனுமெண்மர்நான்காவரணத்தேகோபயப்பிரதாசிங்கமுகரே. (௩௨)

வருகூறநிதாடசாகிப்பிரப்பிரதர்வரமருள்சிந்தாமணிதந்தவத்தர்பீசண்டி, முருகிதழிமலரணிந்தமுடிமயூரத்துவரண்டமுண்டரிவரெண்மரேயைந்தின்மணிகரணர், திருகறுமாசரசிருட்டிவிநாயகரேயியக்கசேவிதராகியகெசகர்ணவிநாயகரே, வெருளறக்குங்கண்டாவிநாயகரேவரங்கள்வீசுசுமங்களரேமந்திரரிவர்களறுவர். (௩௩)

ஆறின்மோதகர்சுமுகர்துன்முகரேகணப்ரபர்விநாயகரேயாக்கினைவிநாயகரே, வீறுவளர்துவாரவிநாயகரவிமுத்தவிநாயகரென்றிவரெண்மரெழிலாரேழுதா, தேறியபாகிரதவிநாயகரேயரிச்சந்திரவிநாயகர்கபர்த்திவிநாயகரேசீர்த்தி, யேறுபேந்துவிநாயகரேசனகவிநாயகரேயிவராறுவரொருங்கைம்பத்தறுவரையுமுணர்க. (௩௪)

வேறு.

என்றிருங்கணங்கள்கூறவெனைவருங்கேட்டலோடு
நன்றுறுதிவ்யமேனிநண்ணினரரசனோடு
வென்றிகொள்விமானமேறிவிநாயகருலகமெய்தி
யொன்றியசாமீபத்தையுற்றினிதிருந்தாரம்மா. (௩௫)

களிமிகுசோமகாந்தன்கணேசர்சாரூபமெய்தி
யொளிமிகுமுலகில்வாழ்ந்தானுயர்ந்தவிப்புராணந்தன்னைத்
தெளிதரப்பத்தியுள்ளந்திகழ்தரக்கேட்டோர்க்கெல்லாம்
வளர்பெருஞ்சனனப்பீழைமரணமென்றிரண்டுமில்லை. (௩௬)

இடரில்லைவறுமையில்லையின்னலோய்சிறிதுமில்லைத்
தொடர்தருதுக்கமில்லைச்சோகமோகங்களில்லை
யடர்தரும்பாவமில்லையரிட்டங்களேதுமில்லைப்
படர்தருபகைகளில்லைபயமில்லையிடையூறில்லை. (௩௭)

மதியினைப்பருதிதன்னைவிளராத்தொடருமெல்லை
பதிகுருக்ஷேத்திரத்திற்பசும்பொன்னாயிரமாம்புரம்
விதியுளிபாத்திரத்தின்வீசியதானபபேறு
முதிர்சினப்பெரும்போராற்றிமுடிந்தவர்பேறுமுண்டாம். (௩௮)

வாழியவெச்சந்தன்னில்வாரணமிறுதியாகத்
தாழறுபொருள்களெல்லாந்தக்கணையோடேந்தானம்
வீழுறுமனத்தினல்கும்விழுத்தகுபயனுமோர்கா
லூழுறப்படிக்கின்றார்கட்குறுபயன்சிறிதுமொவ்வா. (௩௯)

கன்னிகாதானங்கோடிகாமர்கோதானங்கோடி
நன்னியமத்தினோடுநல்கியபயனுண்டாகுந்
தன்னதுகரத்தான்முற்றுமெழுதினான்றனக்குச்சாலப்
பொன்னளித்தெழுதுவித்தான்றனக்குமப்புண்ணியமாமே. (௪0)

எழுதியபுராணம்வைகுமில்லிடைத்திருவோரெட்டுங்
குழுமுபுநடனஞ்செய்யுங்கூளிகள்பிரேதம்பேய்கள்
பழுதுசெய்கின்றபாலகிரகங்களாதிபற்றா
விழுமியகணேசர்தாமேவீற்றிருந்தினிதுகாப்பார். (௪௧)

பூசனையினிதுசெய்வோர்புந்தியினினைப்போராதித்
தேசினர்தம்மைக்காணிற்செயிருறுபதிதர்தாமுந்
தூசினைவிடுத்துச்சுத்தராய்க்கதியடைவரென்றாற்
பூசகராதியோர்க்குப்புணர்பலன்யாவர்சொல்வார். (௪௨)

அவர்களேபிரமனாதியமரரான்முனிவர்தம்மா
லுவகையிற்பூசைசெய்யப்படுவரொண்சித்தியெட்டுந்
தவவுறுமவர்க்கேகற்பத்தருநிதிகாமதேனுக்
கவர்கொடைமணியுமன்னார்கைவசப்பட்டுநிற்கும். (௪௩)

ஆகருடணமேயுச்சாடனமடர்மோகனங்கண்
மாகர்வீழ்தம்பனங்கண்மாரணமிவையுமுண்டாம்
வேகவன்வெகுளியன்னார்விளைத்திடிற்றுறக்கமாதி
போகவைப்பனைத்துமெல்லாப்புவனமுஞ்சாம்பராமே. (௪௪)

ஐங்கரன்றிருமுன்னிந்தப்புராணத்தையன்பிற்கேட்டோர்
துங்கவைம்பாதகங்கடோகையர்தம்மைக்கோவைப்
பங்கமின்மகவைக்கொல்லும்பாதகமாதிநீங்கி
மங்கலவினைகள்வாய்ந்துவான்பெறுவார்கண்மெய்யே. (௪௫)

சூத்திரன்கேட்கிற்பாவந்தொலையமூவர்களுமாவ
னேத்துபூவணிகன்கேட்கினிருவருமாவன்மன்னன்
சாத்திரமறையோனாவன்றருமறையவன்பல்போகங்
காத்திடுமமரராவன்கடவுளர்கணேசராவார். (௪௬)

கன்மத்தினீனமுற்றகழிதகைவிழைந்துகேட்கிற்
கன்மத்தினதிகாரத்தைக்கைக்கொள்வன்கணேசற்கான
நன்மையசதுர்த்திதன்னினயந்துகேட்டவன்காமங்கள்
பன்முறைபெற்றந்தத்திற்பரகதியினிதுசார்வன். (௪௭)

எவ்வளவிப்புராணத்திருந்தனதோத்திரங்க
ளவ்வளவையுநாடோறுமன்புடன்பழிச்சுகின்றோன்
கவ்வியமலத்தினீங்கிக்கணேசனேயாவனன்னாற்
கிவ்வுலகத்திற்சாதித்திடாதகாரியங்க[illegible] (௪௮)

ஆதிதொட்டந்தங்காறுமன்பினிற்படித்துக்கேட்டுக்
காதலினன்னநல்கிக்காமருசெந்தீவேட்டு
மேதகநகர்சூழ்வித்துவிழாவயர்ந்துவக்கவல்லான்
சீதரன்வணங்கத்தேவதேவசாரூபஞ்சார்வான். (௪௯)

கன்னிகைகேட்டானல்லகணவனையடைவள்வந்தி
நன்னயப்போடுங்கேட்டானல்வகைமலடுநீங்கி
மன்னுபுத்திரரையீன்றுவாழ்குவள்பொருள்கையில்லான்
பொன்னினைப்பெறுவன்வித்தையில்லவன்புலவனாவான். (ருo)

எவனெவனெதனைக்காமுற்றிப்புராணத்தைக்கேட்டா
னவனவனதனைக்கைப்பெற்றமலனாருவப்பவாழ்வன்
பவமிலிப்புராணக்கேள்விப்பயத்தினாற்குருடுமூகை
கவலைசெய்செவிடுபங்குமுதலவுங்கழன்றுபோமே. (ருக)

மூவறுபுராணமுற்றுமுறைமையிற்கேட்டுளோர்க்கு
மேவருபயன்களிந்தமேதகுபுராணமோர்காற்
றூவறக்கேட்டுளோர்க்குச்சாருமெத்தீர்த்தமாட்டு
மோவறத்தோய்ந்துளார்க்கங்குறுபயன்றானுமுண்டாம். (ருஉ)

அயுதமாண்டொற்றைத்தாளினங்குட்டநிலத்திலூன்றிப்
பயிலுமைந்தழலினாப்பட்பண்ணுமெய்த்தவத்தின்பேறு
செயிரிலிப்புராணந்தன்னிற்றிகழுமத்தியாயம்பத்து
மயர்வறவோதுவார்க்குமருவுவதுண்மையாமே. (ருங)

எம்பிரான்சரிதமானவிதுமரணூர்தங்கேட்டுத்
தம்பொருள்வழங்குவோர்கள்சக்கரவர்த்தியாவர்
நம்பியசனனந்தொட்டுநசிப்பதுகாறுங்காசி
பம்பெழினகரின்வைகும்பயன்களுமவர்க்குண்டாமே. (ருச)

ஆயிரமாகமாதமவிர்பிரயாகந்தன்னின்
மாயிருவிதியினாடும்வரமுங்கோமதிதான்சென்று
மேயினசங்கமத்தின்விழைதகக்கோடிதானம்
பாயினபலனுமென்றும்படிப்பவர்தமக்குண்டாமே. (ருரு)

பரவுமிப்புராணந்தன்னைப்படிப்பினும்பயன்கேட்டாலுங்
கரவறப்பூசித்தாலுநகையினாலெழுதினாலு
மிரவலர்க்கெழுதியன்போடீயினும்படிப்பித்தாலும்
விரவுறக்கேட்பித்தாலும்விழைந்துபூசிப்பித்தாலும். (ருசு)

எழுதுவித்தாலுநன்றாயெழுதுவித்தீவித்தாலும்
பழுதறப்படித்தலாதிபயின்றவர்தமக்குச்செம்பொன்
விழுமியதுகிலுமற்றும்வீசினுமூகமனாதி
தழுவினர்செயினும்பூசைசமைப்பினுமெதுசெய்தாலும். (ருஎ)

இத்தகுபணியுளொன்றையியற்றினர்தாமெல்லாரு
முத்தலைவேலுக்கஞ்சார்மொய்யொளிநேமிக்கஞ்சார்
பைத்தபாசத்துக்கஞ்சார்பருத்ததண்டத்துக்கஞ்சா
ரத்தகுபுராணந்தன்னையறிந்தவாறுரைத்திட்டேனே. (ருஅ)

பூமலிகொன்றைவேணிப்புண்ணியக்கணேசர்சீர்த்தி
தாமலிபுராணஞ்சேடன்சண்முகன்பிரமனாலு
மாமளவறிந்துகூறலாகுமோவிதுவேபோலுந்
தோமறப்பயன்கள்[illegible]குந்தொகுத்தபண்டாரமம்மா. (ருகூ)

என்றுயர்சூதமேலோனியம்பலுமகிழ்ச்சிபூத்து
நன்றுநைமிசமாம்வைப்பினற்றவமுனிவரெல்லா
மன்றிதொட்டருட்கணேசரகமகிழ்புராணஞ்சால
வொன்றியவன்பிற்போற்றியுவந்துவீற்றிருந்துவாழ்ந்தார். (சுo)

திங்களையணிந்தவைக்கைச்செம்மல்பொற்சரணம்போற்றி
பங்கில்வீற்றிருந்தசித்திபுத்திதம்பதங்கள்போற்றி
யங்கவர்க்கன்புசெய்யுமடியவரடிகள்போற்றி
நங்குருநமச்சிவாயனளின்பாதங்கள்போற்றி. (சுக)

அருள்பொழிகணேசன்செய்யவடிமலர்வாழ்கவன்றன்
பொருவிலிப்புராணமோங்கிப்பொலிகவீதுணர்ந்தெல்லோரு
மருவுகபயன்களுன்குமன்னுகவுலகமெல்லாந்
திருவொடுஞ்சிறக்கவெங்குஞ்செயிரிலாச்சைவமென்றும். (சுஉ)

வேறு.

வரசன்னவீரமுரத்திடைவிளங்குமுடியின்வயங்கவிண்ணோர்
பரசன்னஙினதுதிருச்சேவடிநாயேன்சிரத்தும்பதித்தல்செய்யாய்
விரசன்னமலர்த்தடஞ்சூழ்சென்னைநகர்வீற்றிருந்தவிமலவாழ்வே
பிரசன்னவிநாயகனேயடியருளம்பிரியாதபெருமையானே. (சுஙு)

திருச்சிற்றம்பலம்.

சோமகாந்தன்முத்தியடைந்தபடலம்முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ஙகயஅ.

## லீலாகாண்டம் முற்றிற்று.

ஆகக் காண்டம் உ-க்கு படலம்-கக-க்கு திருவிருத்தம்-சுஉஉ0.



இச்சித்தாரும்படிக்கவிந்நூலருள்
கச்சியப்பன்கழலிணைவாழ்க.

சுபம்! சுபம்!! சுபம்!!!



உ
கணபதிதுணை.

# படல அட்டவணை.